# காலத்தை வென்ற
# இந்துமதம்!

மனங்களை மலரச் செய்யும்
தத்துவங்கள்

ஸ்ரீ வேணுகோபாலன்



# 1

# புத்த மதம்

நேபாளத்தின் தெற்குப் பகுதியில் இருந்த ஒரு குட்டி தேசத்தை சாக்கிய மரபினர் ஆண்டு வந்தனர். அதை சுத்தோதன கௌதமர் என்ற மன்னன் ஆண்டு வந்தான். தேவதையைப்போல் ஜொலித்த அவன் மனைவி மகாமாயா முதலாவதாகக் கர்ப்பம் தரித்திருந்தபோது, ஒரு நாள் இரவு கனவொன்று கண்டாள்! அதில் குட்டி யானையொன்று வந்து அவளை ஆசீர்வதித்தது. இதுவோர் சுபசகுனம்!

இந்திய மரபுப்படி குழந்தை பெற்றுக் கொள்வதற்காகத் தனது தந்தையின் நாட்டுக்குப் பயணம் மேற்கொண்டாள் மகாமாயா. பயண வழியிலேயே பிரசவவலி கண்டாள்! லும்பினி என்ற நகரத்தின் பக்கத்திலுள்ள ஒரு தோப்பில் உடன் வந்த தாதியர் அவளுக்கு மகப்பேறு பார்த்தனர். அப்போது அவளுக்கு நிழல் தருவதுபோல் ஒரு மரத்தின் கிளையானது சாய்ந்து குடை பிடித்தது!

ஒளியே உருக்கொண்டதுபோல் ஒரு ஞானம் குழந்தையாய் பிறந்தது! அந்த ஞானஒளியைக் கண்டு ஆனந்திப்பதுபோல் வானம் வர்ஷித்தது! பூ மழை தூவியது! தாயும் மகவும் தூய்மை அடைந்தார்கள்!

தான் அதிசயக் குழந்தை என்பதைப் பிறக்கும்போதே பூடகமாய் உணர்த்தியது. கண் திறந்தபடியே மண்ணில் மலர்ந்தது அந்தக் குழந்தை. பிறந்த கணமே 'இவ்வுலக மாந்தரின் கஷ்டங்களைப்

போக்குவதற்காக நான் வந்திருக்கிறேன்' என்று பேசியது!

அக்குழந்தைக்கு சித்தார்த்தன் என்று பெயர் சூட்டி மகிழ்ந்தார்கள்! ஏழாவது நாளே தாய் மகாமாயாவை மரணம் அபகரித்துக் கொண்டது. அதனால் தாயின் சகோதரி மகாபிரஜாபதி பொறுப்பில் வளர்ந்தான் சித்தார்த்தன். தந்தைக்குத் தாளமுடியாத சோகம். குழந்தையின் எதிர்காலம் எப்படி இருக்கும் என்று தெரிந்துகொள்ளும் ஆவலில் அஸிதா என்ற ஜோதிடரை அழைத்துக் கேட்டார்!

'ஒன்று மன்னனாவான் அல்லது மகானாவான்' என்றார் ஜோதிடர் அஸிதா!

மகன் துறவி ஆவதில் எந்தத் தந்தைக்குத்தான் மனம் ஒப்பும்? எனவே, துறவு மனோபாவமே மகனுக்கு வந்துவிடக்கூடாது என்று முடிவு கட்டி, அரண்மனைக்குள்ளேயே கூண்டுப் பறவையாக வளர்த்தார் சுத்தோதனர். துன்பப்பட்டவர்கள், நோயாளிகள் எவரும் அவன் கண்ணில் படக்கூட அனுமதிக்கவில்லை! மரணம் என்ற ஒன்று உண்டு என்பதேகூட தெரியாமல் பார்த்துக் கொண்டார். சுகபோகங்களில் மட்டுமே மகனின் மனம் லயித்துக் கிடக்க வேண்டும் என்பதற்காக அழகிய பெண்களின் நாட்டியங்களைத் தொடர்ந்து அரண் மனைக்குள் அரங்கேற்றினார். 16 வயதிலேயே யசோதரா என்ற பெண்ணை மணம் முடித்து வைத்தார்.

வாலிப சித்தார்த்தன் வெளியுலகம் பார்க்க விரும்பினான்! வாலி பனைத் தடுக்க முடியாது என்றுணர்ந்த தந்தை, மகன் போகிற வழியில் எங்கும் துயரமான காட்சிகளே படாமல் பார்த்துக் கொள்ள ஆணையிட்டார்! ஆனால் விதியின் வழி வேறல்லவா!

தலைநகர் கபிலவஸ்துவின் வீதியில் செல்லும்போது சித்தார்த்தன் கண்களில் ஒரு வயோதிகத் தம்பதி பட்டனர். தொடர்ந்து அவன் ஆற்றின் பக்கம் சென்றபோது, ஒரு பிணம் எரிவதைப் பார்த்தான்! அவன் முதன் முதலில் மரணம் பற்றி அறிந்தான்.

உடன் வந்த நண்பன் சண்டகாவிடம் கேட்டபோது சரியான விளக்கமில்லை! அதனால் இதயம் இடம் மாறி பயணத்தைத் தொடங்கியது! ஒரு சந்நியாசியைச் சந்தித்து விளக்கம் கேட்டான் சித்தார்த்தன்! அவரது விளக்கங்களைக் கேட்டபிறகு-

'எல்லாருமே பிற்காலத்தில் வயதானவர்களாக ஆவார்கள். ஆனால் இதை அறியாதவர்கள்தான் வயதானவர்களைக் கண்டால் வெறுப்படைவார்கள். நாம் எப்போதும் இளமையோடு வாழ்வோம்

என்று நினைக்கிறார்கள். நான் சாதாரண அறியாமையோடு இருக்க விரும்பவில்லை. எனக்கு இளமையில் மயக்கமான வாழ்வு நிச்சயம் தேவையில்லை. இளமையாக உள்ளவர்கள் ஒரு நோயாளியைப் பார்த்தால் பொதுவாக வெறுக்கிறார்கள். தாங்களும் ஒருநாள் நோயாளி ஆவோம் என்பதை மறந்துவிடுவார்கள். அவர்களைப்போல நான் இருக்க வேண்டியதில்லை' என்று நினைத்தான் சித்தார்த்தன்.

சித்தார்த்தன் தனது 29-ஆவது வயதில் ஒரு முடிவுக்கு வந்தான்.

இனிமேல் வழக்கமான வாழ்வில் வாழ அவன் மனம் சம்மதியாது என்பதை அறிந்தான். வாழ்வில் வரும் துன்பங்களைக் கடந்து செல்ல வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது.

ஒருநாள் இரவு தனது பிறந்த குழந்தை ராகுலனுக்கும் தூங்கும் தனது மனைவிக்கும் முத்தம் கொடுத்தான்.

தனது நண்பன் சண்டகாவோடும், குதிரை காந்தகாவோடும் அரண்மனையை விட்டு வெளியேறினான்.

கானகத்தை அடைந்ததும் தனது விலையுயர்ந்த வஸ்திரங்களை எறிந்துவிட்டு, தனது குதிரை காந்தகாவை சண்டகாவுக்குக் கொடுத்தான். "நீ அரண்மனைக்குப் போகலாம்" என்று அவனுக்கு உத்தரவு வழங்கினான்.

தனது நீண்ட தலைமுடியை வெட்டிக்கொண்டு காட்டை நோக்கிச் சென்றான் சித்தார்த்தன்.

அந்த நாளில் பிரபலமாக விளங்கிய இரண்டு குருமார்களிடம் சென்று உபதேசம் பெற்றான். ஆனால் அதில் அவனுக்கு மன அமைதி கிடைக்கவில்லை. பின்னர் அவன் ஐந்து துறவிகளைச் சந்தித்தான். அவர்களிடம் உபதேசம் பெற்று தன் உடலையே வாட்டிக் கொண்டான். ஆறு வருடங்கள் இந்த முயற்சிகளில் ஈடுபட்டான். அவனது கடுமையான தவமும், அவன் தன்னை வாட்டிக் கொண்ட முறையும் கண்டு அதிசயப்பட்ட ஐந்து துறவிகளும் அவன்தான் உண்மையில் தங்கள் குரு என்று எண்ணி அவனுக்கே சீடர்கள் ஆனார்கள்.

எனினும் சித்தார்த்தன் தேடிய விடை அவனுக்குக் கிடைக்கவில்லை.

எடுத்த விரதங்களை மேலும் கடுமையாக்கி உணவும் தண்ணீரும் அருந்தாமல் தவம் இயற்றத் தொடங்கினான். பசியும் தாகமும் வாட்டி எடுத்து இறந்துவிடும் நிலைக்கு வந்தான்.

ஒருநாள் அந்தப் பக்கம் வந்த சுஜாதா என்ற குடியானவப் பெண் சித்தார்த்தவின் நிலையைக் கண்டு மிகவும் வருந்தினாள்.

பால் கஞ்சியைக் கொடுத்து சித்தார்த்தனைச் சாப்பிடும்படி மிகவும் வேண்டினாள்.

அப்போது சித்தார்த்தனுக்கு ஒரு விஷயம் புரிந்தது. இது போன்ற கடும் விரதங்கள் எந்தவித மன முன்னேற்றத்தையும் கொடுக்காது என்றுணர்ந்தான்.

இதனால் இந்த விரதங்களில் நடுநிலை வகிப்பதே சரி என்று நினைத்தான். அதீத உணவும் கூடாது; அதீத பட்டினியும் கூடாது என்று தீர்மானித்தான்.

குடியானவப் பெண் கொடுத்த உணவைச் சாப்பிட்டுவிட்டு ஆற்றில் நீராடி எழுந்தான். அவனோடு இருந்த ஐந்து துறவிகளும் சித்தார்த்தன் துறவறத்தை விட்டுவிட்டான்; சாதாரண மனித வாழ்க்கையை ஏற்றுவிட்டான் என்று எண்ணி அவனை விட்டு விலகிச் சென்றார்கள்.

சித்தார்த்தன் பின்னர் 'போத் கயா' என்ற நகருக்குச் சென்றான். அங்கே ஒரு அரச மரத்தின் அடியில் அமர்ந்தான். தனக்கு ஞானம் வராதவரை அந்த இடத்தை விட்டு அகலப் போவதில்லை என்று தீர்மானமாக இருந்தான். அரச மரத்தின் அடியில் ஆழ்ந்த தியானத்தில் ஈடுபட்டான். தன்னை அணுகும் எந்த ஆசாபாசங்களுக்கும் இடம் கொடுக்காது பார்த்துக் கொண்டான். அந்த ஆழ்ந்த தியானம் சித்தார்த்தனை சிறுகச்சிறுக மெய்ப் பொருளை நோக்கி இழுத்துச் சென்றது. அவனது முந்தைய பிறவிகள் யாவும் தெரிய ஆரம்பித்தன. பிரபஞ்சத்தில் நடப்பது எல்லாம் அவனுக்கு நன்றாகத் தெரிந்தன.

வைகாசி மாதம் பௌர்ணமி அன்று சித்தார்த்தனுக்குப் பூரண ஞானம் ஏற்பட்டது. உலகின் துயரங்கள் யாவும் அவரது ஞானத்திற்கு முன்னால் தூசாக மாறின. பலர் வந்து அவரது தியானத்தைக் கலைக்கப் பார்த்தாலும் அவர் அசையவில்லை. பல தினங்களாகத் தியானத்திலேயே ஆழ்ந்திருந்தார்.

ஒன்று அவருக்குப் புரிந்தது.

அவர் பெற்ற ஞானத்தை மற்றவர்களுக்குப் புரிய வைப்பது மிகவும் கடினம் என்பதை உணர்ந்தார்.

இந்த நிலையில் பிரம்மாவே சித்தார்த்தருக்குமுன் தோன்றி, "நீ மற்றவர்களுக்கு நிச்சயம் உபதேசம் செய்! இதனால் பலர் பயன்

பெறுவார்கள்!" என்று ஆசி கூறினார்.

சித்தார்த்தன் புத்தராக திருநாமம் பெற்று உபதேசம் செய்ய சித்தம் ஆனார்.

காசி பக்கத்தில் சாரநாத் என்ற ஒரு ஊர்! 'போத் கயா'விலிருந்து அது நூறு மைல் தொலைவில் உள்ளது. அங்கே அவர் தனது பழைய ஐந்து துறவிகளைச் சந்தித்தார்.

அங்கே மான்கள் வாழும் ஒரு காட்டில் புத்தர் தமது உபதேசங் களைத் தொடங்கினார். நான்கு தர்மங்களையும், எட்டுவித வழிகளையும் அவர்களுக்குப் போதித்தார். ஐந்து துறவிகளும் அவருடைய ஐந்து சீடர்கள் ஆனார்கள். அவர்கள் 'சங்கம்' என்ற பெயரில் துறவிகளின் கூட்டு வாழ்க்கையை ஆரம்பித்தார்கள்.

மகத தேசத்தை ஆண்டார் பிம்பிசாரர் என்னும் அரசர். அவர் புத்தரின் உபதேசங்களைக் கேள்விப்பட்டார். தமது தலைநகரான ரா்ஜகிருகாவில் ஒரு பெரிய மடம் அமைப்பதற்கு அவர் மான்யம் கொடுத்தார். மழைக்காலத்தில் அது மிகவும் உபயோகமாக இருக்கும் என்று நினைத்தார்.

மேலும் இதுபோன்ற பல தானங்களும், புத்தரின் சீடர்களை வந்து அடைந்தன. இதனால் மக்களிடையே புத்தரின் செல்வாக்கு பரவியது. எங்கும் புத்தரின் உபதேசங்கள் பரவ ஆரம்பித்தன.

இந்தச் சமயத்தில் புத்தரை அவரது மனைவி யசோதரா, மகன் ராகுலன், தந்தை சுத்தோதனர், அத்தை ஆகிய நான்கு பேரும் சந்தித்தார்கள்.

மகன் ராகுலன் இப்போது வளர்ந்திருந்தான். தந்தை புத்தரின் உபதேசத்தால் அவனும் ஒரு துறவியானான். தனது தந்தையோடு பேசிய பேச்சுக்களை அவன் சூத்திரங்களாக வழங்கினான்.

புத்தரின் தந்தையான சுத்தோதனருக்கு மனதில் தாபம் அதிகம். ஏனெனில் தனது மகன் சித்தார்த்தனும், பேரன் ராகுலனும் துறவிகள் ஆகிவிட்டனர். எனவே புத்தரிடம் ஒரு வேண்டுகோள் விடுத்தார். "ஒருவர் துறவி ஆவதற்கு முன் பெற்றோரிடம் அனுமதி பெறவேண்டும். அதற்கு உத்தரவு கொடு!" என்றார். புத்தர் இதற்கு இசைந்தார்.

புத்தரின் அத்தையும், மனைவியும் சங்கத்தில் சேர்த்துக்கொள்ளும் படி அனுமதி வேண்டினார்கள்.

சங்கத்தில் எப்பொழுதும் ஆண்கள்தான் சேருவார்கள். இந்நிலையில்

பெண்களை அனுமதித்தால் அது நன்றாக இருக்குமா? என்று ஆலோசித்தார்கள்.

ஆனால் புத்தர் அதற்கு அனுமதித்தார். அத்தையும், மனைவியும் பெண் பிட்சுக்களாக மாறினார்கள்.

'ஒரு மனிதன் பணக்காரனாக இருப்பதோ அல்லது ஏழ்மையாக இருப்பதோ எந்தவிதத்திலும் அவன் ஞானமடைவதை பாதிக்காது. அவன் விரும்பினால் நிச்சயம் ஞானம் அடைவான். எனவே எல்லாருமே ஞானவழியில் செல்லத் தகுந்தவர்கள்' என்று போதித்தார் புத்தர்.

முதன்முதலாக புத்த பிட்சுவாக, மாறிய உபாலி என்பவர் ஒரு முடிவெட்டும் தொழிலாளி. பின்பு பல அரசர்களும் புத்தபிட்சுகளாக ஆனாலும், இந்த உபாலி என்பவர் மன்னர்களைவிட மேலானவராகக் கருதப்பட்டார்.

புத்தர் தமது 35-ஆவது வயதில் ஞானம் அடைந்தார். அவர் வடகிழக்கு இந்தியாவில் அடுத்த நாற்பத்தைந்து வருடங்க்ள் உபதேசம் செய்தார்.

புத்தரின் வயது 80 ஆகியது. தனது நண்பரும், உறவினருமான ஆனந்தா என்பவரை அழைத்து தாம் உடலை சீக்கிரம் விட்டுவிடப் போவதாக அறிவித்தார்.

குஷி நகரம் என்ற ஒரு ஊர். அவரது பிறந்த ஊரிலிருந்து 100 மைல் தூரத்தில்தான் இருந்தது. புத்தர் அங்கே கெட்டுப்போன உணவுகளைச் சாப்பிட்டு விட்டார். அதனால் அவர் நோயடைந்தார்.

எனவே பெரிய விருட்சங்கள் நிறைந்த ஒரு தோட்டத்துக்குள் சென்று ஆழ்ந்த தியானத்தில் இறங்கினார். அங்கேயே அவருடைய மரணம் அவர் விரும்பிய நேரத்தில் சம்பவித்தது.

அவரது கடைசி வார்த்தைகள் இதுதான். "உலகில் எல்லாமே நிலையற்றவை. இதைத் தெரிந்து கொண்டு ஞானத்திற்கு முயற்சி செய்யுங்கள்!"

புத்தர் ஒரு வாரிசை நியமிக்கவில்லை. அதற்கு விருப்பப்படவும் இல்லை. அதனால் அவர் இறந்தபிறகு பல இயக்கங்கள் வெவ்வேறுவித கொள்கைகளோடு அடுத்த 400 ஆண்டுகளில் பிரிய ஆரம்பித்தன.

**நான்கு முக்கியமான உண்மைகளை புத்தமதம் கூறுகிறது!**

1. வாழ்வெல்லாம் துக்கமயம். இந்த துக்கத்தை நாம் இழப்பு என்றும்,

ஏமாற்றம் என்றும், நோய் என்றும் பலவித பெயர் சொல்லி அழைக்கிறோம். நமது வாழ்க்கையே போராட்டமாகும். நாம் அடையும் அனுபவத்தால் நாம் மகிழ்ச்சி அடையப் போவதில்லை. எல்லா சுகமும் மாயமே.

2. எல்லா துக்கங்களுக்கும் காரணம் மனிதர்களின் ஆசைதான். தமது எல்லாக் கஷ்டங்களுக்கும் காரணத்தை நாம் மற்றவர்மீது போடுகிறோம். நம் கஷ்டங்களுக்கு முக்கியமான காரணம் நமது மனதுதான் என்பதை நாம் உணர வேண்டும்.

3. நமது துக்கம் அகலவேண்டுமானால், நமது ஆசை அகலவேண்டும். நமது கஷ்டங்களுக்கு நாமேதான் காரணம். நமக்கு நேருவதை யாராலும் மாற்ற முடியாது.

4. நாம் முன்னேற முக்கியமான வழிகள்: சரியான நோக்கம், சரியான வழி, சரியான செய்தி, சரியான பேச்சு, சரியான வார்த்தை, சரியான முயற்சி.

புத்த மதத்தின் மூன்று பொக்கிஷங்கள்- 1. புத்தம் 2. தர்மம் 3. சங்கம்.

இந்த மூன்றிலும் நம்பிக்கை வைத்துதான் ஒருவன் மாறமுடியும். புத்தம் என்றால் சரித்திரத்தில் வாழ்ந்த புத்தர் மட்டுமன்று. அவரால் சொல்லப்பட்ட உபதேசங்களை நம்புவதுதான் முக்கியம். புத்தரின் உபதேசங்கள்தான் தர்மம்.

அதேபோல் சங்கம் என்பதும் புத்த பிட்சுகளின் ஐக்கியத்தைக் காட்டக்கூடிய ஒரு முக்கிய பொக்கிஷம்.

கொல்லாமை என்பதைக் கடைப்பிடிக்க வேண்டும். அது ஒரு முக்கிய புத்தக் கொள்கை. இரண்டாவதாக நமக்குக் கொடுக்கப் படாததை நாம் எடுத்துக் கொள்ளக்கூடாது. மூன்றாவது காமத்தில் ஈடுபட்டு கெட்ட செயல்களில் போகக்கூடாது. நான்காவது உண்மை அல்லாத வார்த்தைகளைச் சொல்லக்கூடாது. ஐந்தாவதாக மது அருந்தக்கூடாது. அதுபோல் லாகிரி உணவுகளைச் சாப்பிடக்கூடாது.

இந்த ஐந்து நெறிகளை உலகமெங்கும் உள்ள புத்த மதத்தினர் தமது வாழ்க்கையில் முக்கிய கொள்கைகளாக வைத்துள்ளார்கள்.

இந்திய வரலாற்றில் புத்த மதம் சற்று வித்தியாசமானது. இந்த மதத்தில்தான் முதன் முதலில் 'மிஷனரிகள்' (சங்கம்) ஏற்படுத்தப்பட்டது. இவர்கள் இந்தியாவிலும், வெளிநாடுகளிலும் சென்று புத்த மதத்தைப்

பிரசாரம் செய்தார்கள். இந்தியாவிலும் புத்த மதம் ஓரளவு வேகமாகப் பரவியது.

புத்தர் வேதங்களை நம்பினார். ஆனால், யாகங்களில் பிராணிகள் கொல்லப்படுவதை அவர் விரும்பவில்லை. அதைத்தான் அவர் தீவிரமாக எதிர்த்தார். இந்தக் 'கொல்லாமை' கொள்கை ஜனங்களிடம் வெகு சீக்கிரம் பரவியது. (இதன் பயனாக யாகங்களில் பிராணிகள் கொல்லப்படுவது நிறுத்தப்பட்டது.)

வெளிநாடுகள் சென்ற 'மிஷனரிகள்' புத்த மதத்தைப் பிரசாரம் செய்தபோது, குறிப்பாக புத்தரின் வாழ்க்கையே ஜனங்களைப் பெரிதும் கவர்ந்தது. புத்தர் ஒரு அரச குமாரராக இருந்தும், அரச வாழ்க்கையைத் துறந்து சாதாரண துறவியாக வாழ ஆரம்பித்தார். மேலும் 'ஜனங்களின் துக்கத்தை எப்படி அகற்றுவது' என்பதே அவருடைய நோக்கமாக இருந்தது. இதுவும் ஜனங்களை வெகுவாகக் கவர்ந்தது. இதனால் அவரது உபதேசங்களைப் பெரிதும் பின்பற்றினார்கள்.

இதனால் கீழை நாடுகளில் புத்த மதம் பரவியது. குறிப்பாக சீனாவிலும், ஜப்பானிலும் வேகமாகப் பரவியது.

புத்தர் ஞானம் பெற்றவுடன், யோசிக்க ஆரம்பித்தார். 'கண்டவர் விண்டிலர்' என்பதுபோல் புத்தரும் தாம் அடைந்த ஞானத்தை பாமர மக்களுக்கு உணர்த்துவது கடினம் என்று நினைத்தார். அப்போது பிரம்மா அவர்முன் தோன்றி, "உன் ஞானத்தை பாமர மக்களுக்கு உபதேசம் செய்" என்று கூறினார்.

எனவே புத்தரும் முதன் முதலாகத் தமது உபதேசத்தில் தான் ஞானம் பெற்ற வழிகளைப் பற்றி கூற ஆரம்பித்தார். அந்த உபதேசங்கள் ஜனங்களைப் பெரிதும் கவர்ந்தன. உதாரணமாக, "வாழ்க்கையின் துயரங்களுக்குக் காரணம் ஆசைதான் என்றும்; அதனால் அந்த ஆசையை நாம் ஒழிக்க வேண்டும். 'உயிரைக் கொல்லாதே; பிறர் பொருளைத் திருடாதே; பொய் சொல்லாதே; கெட்ட' எண்ணங்களை நினைக்காதே. மது முதலிய போதைப் பொருட்களை விரும்பாதே" போன்ற உபதேசங்கள் ஜனங்களை ஈர்த்தது.

இப்பொழுதும் கீழை நாடுகளுக்குச் சென்று பார்த்தால் இரண்டு இந்துக் கடவுள்களைப் பார்க்கலாம். ஒன்று விநாயகர்; மற்றொன்று பிரம்மா.

பிரம்மாவை வணங்குவது சில சமயக் காரணங்களால் இந்தியாவில் குறைந்துவிட்டது. ஆனால் கீழை நாடுகளில், நான்கு தலைகள், நான்கு

கரங்கள் உடைய பிரம்மா தென்படுகிறார். ஜனங்களும் அவரைப் பயபக்தியுடன் வணங்குகிறார்கள். (சீனாவில் டாக்ஸி டிரைவர்கள் தங்களது டாக்ஸியில் பிரம்மாவின் உருவங்களை வைத்திருப்பதை இன்றும் காணலாம்.)

புத்த மதம் பரவியதில் ஆங்காங்கே ஜனங்கள் தங்கள் பழக்க வழக்கங்களுக்கு ஏற்ப புத்த மதத்தை மாற்றிக் கொண்டார்கள். இதேபோல் புத்தரின் உபதேசங்களையும் அவரவர் விருப்பம்போல் மாற்றினார்கள்.

புத்த மதத்தைச் சேர்ந்த 'மகாயன' என்ற சித்தாந்தம் சீனா, ஜப்பான், கொரியா, வியட்நாம் போன்ற நாடுகளில் பரவியது. 'மகாயன' என்றால் 'பெரிய பரிசல்' என்று அர்த்தம். இந்த முறைதான் பாமர மக்களுக்கு உகந்ததாக இருந்தது.

ஞானத்தை விரும்பும் மக்கள் 'தேரவாடா' (முதியவர்களின் வழி) என்ற சித்தாந்தத்தை நம்ப ஆரம்பித்தார்கள். இதை 'ஹினாயன' என்று கூறுவார்கள். 'தேரவாடா' சித்தாந்தம் புத்தரின் உபதேசங்களுக்குக் கிட்டத்தட்ட அனுசரணையாக உள்ளது. இந்த சித்தாந்தத்தில் தியானம் ஒரு முக்கிய அங்கம் வகிக்கிறது.

'வஜ்ராயண' சித்தாந்தத்தை சீனாவில் சில பகுதிகளிலும், மங்கோலியாவிலும், ரஷ்யாவிலும், திபெத்திலும் பின்பற்றுகிறார்கள். திபெத்தைச் சேர்ந்த தலாய் லாமா என்பவர் இந்தச் சித்தாந்தத்தைப் பின்பற்றினார்.

புத்தமதம் தற்போது மேலைநாடுகளிலும் பரவி வருகிறது. அங்கேயும் அதில் பல பிரிவுகள் உள்ளன. இந்தியாவில் தோன்றிய இசங்களில் புத்திசம் மிகப் பரவலான மக்களால் பின் பற்றப்பட்டு வரும் இசம்.

புத்தமதத்தை நாடெங்கும் பரப்பியதில் முக்கியமானவர் அசோகர். இவர் மௌரிய சாம்ராஜ்யத்தின் மூன்றாவது அரசர். இவரைப் பற்றி எச்.ஜி.வெல்ஸ், "உலகத்தை ஆண்ட ஆயிரக்கணக்கான அரசர்களில் அசோகர் என்ற பெயர்தான் உண்மையில் ஒரு நட்சத்திரமாக ஜொலிக்கிறது" என்றார்.

அசோகர் ஆரம்பத்தில் ஒரு கடுமையான மன்னராகத்தான் விளங்கினார். எந்த யுத்தத்திற்கும் தயங்கமாட்டார். அப்படிப்பட்ட ஒரு மன்னர் புத்த சமயத்தைத் தழுவி, தனது நடத்தையை மாற்றிக் கொண்டார். ஒரு துறவி போல் வாழ்ந்தார். இது உலக அதிசயங்களில் ஒன்று.

இவர் புத்தமதத்தைப் பரப்புவதில் அந்தக் காலத்து வழக்கமான கல்வெட்டுகளைச் சாதனமாகக் கொண்டார். அவர் உருவாக்கிய கல்வெட்டுகள் வடஇந்தியாவில் பலவிதங்களில் சிதறிக் கிடக்கின்றன. அவற்றை நிறையபேர் மொழிபெயர்த்து இருக்கிறார்கள்.

இப்போது கலிங்கா கல்வெட்டுகளைப் பார்ப்போம்.

அசோகர் கலிங்கத்தின்மீது போர் தொடுத்தார். சுலபமாக வென்றார். யுத்த களத்தில் ஆயிரக்கணக்கானவர்கள் இறந்திருப்பதைப் பார்த்தார். அவர் மனம் வெதும்பியது. 'இத்தனை பேர்களா எனக்காக உயிரை இழந்தார்கள்! நாம் செய்தது மாபெரும் தவறு' என்று வருந்தினார். 'இனி யுத்தமே செய்யக்கூடாது' என்று நினைத்தார். அந்தச் சூழ்நிலையில் அவருக்கு புத்தரின் கொள்கைகள்தான் மிகவும் ஏற்றதாகத் தோன்றின. எனவே புத்த மதத்தைத் தழுவினார்.

அதன்பின் கலிங்கத்துக் கல்வெட்டுகள் மூலம் புத்தரின் கொள்கைகளை நாட்டுக்குப் பரப்பினார். அந்தக் கல்வெட்டுகளின் சாராம்சத்தை இங்கே தருகிறோம்.

## கலிங்கத்துக் கல்வெட்டு

"தேவர்களுக்குப் பிரியமான நான் மகாமாத்ராஸ் என்ற கண்காணிப்பாளர்களுக்குச் சொல்வது என்னவென்றால், நான் எதெல்லாம் சரி என்று நினைக்கின்றேனோ அதை. அவர்கள்தான் நிறைவேற்றி வைக்க வேண்டும். இப்போது அவர்களுக்கு இந்த உபதேசங்களைத் தருகிறோம்.

நீங்கள்தான் ஆயிரக்கணக்கான மக்களின் இதயத்தைக் கவர்ந்து அவர்களுக்கு என் கொள்கைகளைப் பரப்ப வேண்டும். எல்லா மனிதர்களும் என் குழந்தைகளே! என் குழந்தைகள் என்றால், நான் அவர்களது நலத்தையும், மகிழ்ச்சியையும் விரும்புகிறேன். இந்த உலகத்தில் மட்டும் அல்ல; இனி வரும் உலகத்திலும் அவர்கள் சந்தோஷமாக இருக்க வேண்டும். நீங்கள்தான் இதைக் கவனிக்க வேண்டும்.

நமது மக்களில் பலர் அநியாயமாக சிறையில் அடைக்கப் படுகின்றனர். அவர்களில் பலர் கொல்லப்படுகின்றனர். அநாவசியக் காரணங்களால் கொல்லப்படுகிறார்கள். நீங்கள் இதெல்லாம் ஏற்படாதவாறு கவனித்துக் கொள்ளவேண்டும். இதுதான் தேவர்களின் பிரியமான எனது உபதேசம்.

ஒவ்வொரு நான்கு மாதங்களுக்கு ஒருமுறை வரும் 'திசா' நாளில்

எல்லா மக்களும் கேட்கும்படி உபதேசிக்க வேண்டும். அவர்களில் எல்லாருமே இந்த உபதேசங்களைப் பின்பற்ற வேண்டும்."

## வேறு கல்வெட்டுகள்

"தேவர்களுக்கெல்லாம் பிரியமான நான், ஒரு சாதாரண சீடனாக மாறியதால் இதுவரை பொறாமை உள்ளவனாக இருந்தேன். சங்கத்தில் சேர்ந்த் ஒரு வருட காலத்தில் நான் இன்னும் அதிக பொறாமைக்காரன் ஆகிவிட்டேன்.

இந்த பாரத தேசத்தின் மக்கள் என்னைவிட பொறாமை கொண்டவர்களாக இருக்கிறார்கள். எல்லாருமே கடவுள் பதத்தை அடைவதற்காகப் பொறாமை கொண்டு புத்தரின் கொள்கைகளைத் தழுவுகிறார்கள்; பரப்புகிறார்கள். (இவர்கள் என்னைவிட வேகமாக முந்துவதால் எனக்குப் பொறாமை.)

எனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது. ஏனெனில், பெரிய மனிதர்கள் மட்டுமல்ல; பண்டிதர்கள் மட்டுமல்ல; சாதாரண பாமரர்களே இத்தகைய கடவுள் அவா கொண்டு பொறாமையோடு ஒருவருக்கொருவர் முன்னே செல்கிறார்கள்.

இந்தவித பொறாமை எங்கும் பரவியுள்ளது. நமது நாட்டின் எல்லைவரை இந்த எமது உபதேசத்தை 250 தடவை நான் போகும் இடமெல்லாம் கூறி வருகிறேன்.

தேவர்களுக்குப் பிரியமானவன் பேசுகிறேன். தாய்- தந்தையை நாம் மரியாதை கொடுத்து வணங்கவேண்டும். அதேபோல் பெரியவரையும் வணங்கவேண்டும். அனைத்து ஜீவராசிகளிடத்திலும் அன்புடன் இருக்க வேண்டும். உண்மையைத்தான் நாம் பேச வேண்டும். இந்த விதத்தில்தான் தர்மம் பரப்பப்பட வேண்டும்."

## மரியாதை வேண்டும்

"உபாத்தியாயரை மரியாதையுடன் வணங்க வேண்டும். ஒவ்வொரு உறவினரிடமும் நாம் மரியாதையுடன் இருக்க வேண்டும். இது நமக்கு பழங்காலத்திலிருந்த தர்மம்தான். ஆனால் இதுதான் நமது நீண்ட ஆயுளுக்கு வழிவகுக்கும்.

தேவர்களுக்கெல்லாம் பிரியமான நான், பிரியதசி என்ற பெயருள்ள அரசனான நான், தர்மத்தின் கொள்கைகளை கல்வெட்டுகள் மூலம், விரைவில் எல்லாருக்கும் பரப்புகிறேன். எந்தவித ஜீவராசிகளையும் நாம் கொல்லக்கூடாது. அவற்றைக் கொன்று யாகமும் செய்யக்கூடாது."

## திருவிழாக்களில் ஜீவ இம்சை கூடாது!

"அதேபோல் எந்தத் திருவிழாவிலும் ஜீவ இம்சை நடக்கக்கூடாது. ஜீவ இம்சை இல்லாத பூஜைகள் நடத்தலாம். முன்பெல்லாம் சமையல் அறைகளில் லட்சக்கணக்கான பிராணிகள் ஒவ்வொரு நாளும் கொல்லப்பட்டன. அவற்றைக் கொன்று கறி சமைத்தார்கள்.

ஆனால் தற்போது (பிரசாரத்திற்குப் பிறகு) யாகங்கள் முதலிய திருவிழாக்களில் மூன்று ஜீவன்கள்தான் கொல்லப்படுகின்றன. இரண்டு முயல்களும் ஒரு மானும்தான் அவை. மான்களைக் கொல்வதுகூட குறைந்து விட்டன. இப்போது இந்தச் சிறு கொலைகளுமே குறைந்து வருகின்றன.

தேவர்களுக்குப் பிரியமான அரசன் பிரியதசி, இந்த நாட்டில் மட்டும் அல்ல; சற்று தொலைவில் உள்ள சோழர்கள், பாண்டியர்கள், சத்திய புத்திரர்கள், கிரேள புத்திரர்கள் இவர்கள் அனைவருடைய தேசமெல்லாம் இந்த அரசன் பிரியதசி எல்லாவித மருத்துவ சிகிச்சைக்கும் ஏற்பாடு பண்ணியிருக்கிறான்! ஒன்று மனிதர்களுக்காக; இரண்டாவது மிருகங்களுக்காக!"

## தாம்பிரவர்ணிக்காரர்கள்

"இவற்றுக்குண்டான மருத்துவ மூலிகைகள் கிடைக்கும்படி செய்திருக்கிறேன். கிடைக்காவிட்டால் அவை எங்கிருந்தாலும், கொண்டு வந்து நடச்சொல்லி வருகிறேன்.

சாலைகளில் கிணறு வெட்டி இருக்கிறேன். மரங்களை நட்டு இருக்கிறேன். இவையெல்லாம் மனிதர்களுக்கும், மிருகங்களுக்கும் தான்."

## வதைக்காதீர்கள்; கொல்லாதீர்கள்!

"இதற்குமுன் பல நூறு வருடங்களாக, ஜீவராசிகளைக் கொல்வதோ அல்லது துன்புறுத்துவதோ சாதாரணமானது. அதுபோலவே உறவினர்கள் ஒருவரை ஒருவர் பகைத்துக்கொள்வதோ; அந்தணர்களையும், துறவிகளையும் பகைப்பதோ, வதைப்பதோ கூடாது.

தேவர்களுக்கெல்லாம் பிரியமான அரசன் பிரியதசி, தர்மத்தை வியாபனம் செய்த பிறகு தர்மம் அதிகமாக வளர்ந்து வருகிறது. எங்கும் நல்ல காட்சிகள்ளத்தான் நான் காணமுடிகிறது.

தாய்- தந்தைக்கும், ஜீவராசிகளுக்கும், அந்தண ருக்கும், உறவினருக்கும். எங்குமே மதிப்பு கொடுத்து வாழ்கிறார்கள். இந்தப் பழக்கங்களும் அதிகமாகப் பரவியுள்ளன.

தேவர்களுக்குப் பிரியமான அரசன் பிரியதசி பேசுகிறேன். நான் உங்களுக்கு உத்தரவிடுகிறேன். நான் எங்கே சாப்பிட்டுக் கொண்டிருந்தாலும் சரி; அந்தப்புரத்தில் இருந்தாலும் சரி; படுக்கையறையில் இருந்தாலும் சரி; பல்லக்கில் சென்று கொண்டி ருந்தாலும் சரி; நமது ஜனங்கள் வாழும் நிலையை அங்கங்கே அறிவிப்பாளர்களை நியமித்து எனக்குத் தெரிவிக்கும்படி கூறியிருக்கிறேன். அவர்கள் சொல்வதை எல்லாம் கேட்டு, அதற்குண்டான பரிகாரங்களை நான் செய்து வருகிறேன்.

தேவர்களுக்குப் பிரியமான அரசன் பிரியதசி பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, அதுவும் முடிசூட்டிய பத்து ஆண்டுகளுக்குப் பிறகு நான் போதி நகரத்துக்குச் சென்றிருக்கிறேன்.

தர்மங்களுக்காகத்தான் நான் தியானம் செய்கிறேன். நான் போகும்போதெல்லாம் துறவிகளுக்கும், மற்றவர்களுக்கும் தான தர்மம் செய்கிறேன்."

### நான் மாறிய விதம்!

"தேவர்களுக்குப் பிரியமான அரசன் பிரியதசி, முடிசூட்டிய எட்டு ஆண்டுகளுக்குப் பிறகு கலிங்க தேசத்தை ஜெயித்தேன். இதில் ஒரு லட்சம் பேர் வெட்டப்பட்டார்கள். லட்சம் பேர்கள் கொல்லப் பட்டார்கள். நிறையபேர் பல்வேறு துன்பங்களை அடைந்தார்கள்.

கலிங்கத்தை நான் வென்றபிறகு, எனக்கு தர்மத்தின் மீது பெரிய நம்பிக்கை விழுந்தது. தர்மத்தை நான் நேசிக்க ஆரம்பித்தேன். தர்ம வழிகளை நான் எல்லாருக்கும் உபதேசிக்க ஆரம்பித்தேன். நான் இப்போது கலிங்கத்தை அழித்ததற்காகப் பெரிதும் வருத்தப்படு கிறேன்."

### இந்தியாவிலிருந்து புத்த மதம் ஏன் மறைந்தது?

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே புத்த மதம் இந்தியாவில் தனது வலுவை இழக்க ஆரம்பித்தது.

இந்தியாவில் உள்ள புத்த மடங்கள் வெகுவாகக் குறைந்தன.

ஒரு காலத்தில் இந்தியா முழுவதும் பரவியிருந்த புத்த மதம், பின்னர்

அது பிறந்த வட இந்தியப் பகுதிகளில் மட்டுமே வலுவுடன் இயங்கிக் கொண்டிருந்தது.

மடங்கள் யாவும் பொது ஜனங்கள் வாழ்விலிருந்து விலகிப்போனதே இதற்குக் காரணம்.

எல்லா மடங்களும் நிறைய மானியங்கள் பெற்றதால் மடத்தில் உள்ளவர்கள் நல்ல வாழ்க்கை வாழமுடிந்தது. இதனால் மடங்களில் இருந்தவர்கள் தமக்கு வேண்டியவர்களை மட்டுமே உள்ளே சேர்த்துக் கொண்டனர்.

தவிர, இந்தியாவில் புத்தமதம் என்பது வேறு ஒரு மதமாகத் தோன்றவில்லை. இந்து மதத்தின் ஒரு பகுதியாகவே அதை மக்கள் நினைத்தார்கள். தங்கள் குடும்பக் கடவுள்களில் ஒருவராகவே புத்தரையும் மக்கள் நினைத்து வணங்கினார்கள்.

புத்தரை தனது பத்து அவதாரங்களில் ஒருவராகவே இந்து மதம் ஏற்றுக்கொண்டது.

இந்து மதத்தின் சடங்குகள் இந்து சமூகத்தில் ஊன்றியது போல், புத்த மதம் இந்திய சமூகத்தினிடையே நன்கு வேர் ஊன்றவில்லை.

1192-ல் முஸ்லிம்கள் இந்தியாமீது படையெடுத்தபோது, புத்த மடங்கள் இடிக்கப்பட்டன. புத்த பிட்சுகள் விரட்டப்பட்டனர். மடங்கள் நசிந்தபிறகு புத்த மதத்தைப் பேணுபவர் யாருமில்லை.

ஆனால் இந்து மதம், மக்கள் வாழ்க்கையில் ஒன்றிவிட்டதால் அதை யாரும் அழிக்க முடியவில்லை.

⌘⌘⌘



# 2

# ஜைன மதம்

**ஜை**னம்- இந்து மதத்திலிருந்து பிரிந்த ஒரு சீர்திருத்த மதம். ஜைனம் என்பது 'ஜினா' என்ற வார்த்தையின் மறுபதம். அந்த வார்த்தையின் அர்த்தம் 'வெற்றி' என்பது. அதாவது, வாழ்க்கைச் சங்கடங்களில் இருந்து வெற்றி அடைவது என்று பொருள்.

ஜைன மதத்தின் ஒரு முக்கியச் செய்தி அகிம்சை! வேத மார்க்கத்தில் இருந்த 'கடவுள் வழிபாடு', 'இயற்கை வழிபாடு' போன்ற பழக்கங்களிலிருந்து ஜைன மதம் மாறுபட்டது.

### ஜைன மதத்தை யார் ஏற்படுத்தினார்கள்?

'ரிஷப' என்பவர்தான் முதலில் இம் மதத்தை ஏற்படுத்தினாராம். வேத காலம் தொட்டே இது ஆரம்பித்து விட்டது என்று பலர் கூறுகிறார்கள். அதற்கு முன்பும் இருந்ததாகப் பல அறிஞர்கள் கூறுகிறார்கள். ஆனால் 'மகாவீரர்' காலத்தில்தான் ஜைன மதம் ஒரு தனித்தன்மையையும் முக்கியத்துவத்தையும் பெற்றது. எனவே, ஜைன மதத்தை உருவாக்கியவர் மகாவீரர் என்று கொள்கின்றனர்.

### மகாவீரரின் வாழ்க்கை

ஜைன மதத்தைத் தோற்றுவித்த மகாவீரர் கி.மு.599-ல் பிறந்தார்.

அவர் ஒரு அரச குடும்பத்தைச் சேர்ந்தவர். அவரது இயற்பெயர் வர்த்தமானன். அவர் பிறந்த வைஷாலி நகரம் தற்போது பீகார் மாநிலத்தில் உள்ளது. தமது 30-ஆவது வயதில் அவர் இல்லற வாழ்க்கையை விட்டு உலகியலைத் துறந்தார்.

தனது உடைமைகளை மட்டுமல்லாது, தனது உடைகளைக்கூட துறந்து சென்றார். அடுத்த பன்னிரண்டு ஆண்டுகள் அவர் ஆழ்ந்த மௌனத்தில் லயித்தார். அவரது ஒரே லட்சியம் எல்லாவித ஆசைகளில் இருந்தும் விடுபட வேண்டும் என்பதுதான்.

## மகாவீரரின் அகிம்சைப் பயணம்

இதற்காக அவர் நீண்ட காலம் எந்த உணவும் உண்ணாமல் இருந்தார். எந்தவித உயிரினத்தையும் துன்புறுத்தாமல் இருந்தார். அவரது எளிய வாழ்வு, தவம் செய்தல், எல்லா ஜீவன்கள் மீதான அகிம்சை உணர்வு இவை யாவும் அவரது சீடர்களுக்கும் இதர ஜனங்களுக்கும் ஒரு எடுத்துக்காட்டாக விளங்கியது. அவரது கடும் தவம் பன்னிரண்டு ஆண்டுகள் நீடித்த நிலையில் அவருக்கு ஞானம் உதயம் ஆனது. அவர் 'சித்தர்' ஆனார்.

இதன் பிறகு, அடுத்த 30 வருடங்களில் அவர், இந்தியாவில் பல இடங்களுக்குப் பாதயாத்திரையாகச் சென்றார். ஆங்காங்கே மக்களுக்கு உபதேசங்கள் செய்தார்.

எல்லாவித ஜனங்களும் அவரை நேசித்தார்கள். பூஜித்தார்கள். ஏழையானாலும் சரி; அரசனானாலும் சரி; எந்த் இனத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும் சரி- இளவரசர்கள், சாதுக்கள் உட்பட எல்லாரும் மிகவும் விநயத்துடன் அவரை வணங்கினார்கள். அவர் கூறுவதை விநயத்தோடு கேட்டார்கள்.

மகாவீரர் தன்னைப் பின்பற்றுகிற சீடர்களை நான்கு விதமாகப் பிரித்தார்.

1. சாதுக்கள்
2. சாத்விகள் (பெண் சாதுக்கள்)
3. சரவக் (சாதாரணமானவர்கள்)
4. சரவிகாக்கள் (சாதாரண பெண்கள்)

## மகாவீரரின் உபதேசங்கள்

மகாவீரரின் முக்கிய உபதேசம் மனிதன் மோட்சம் அடைய

வேண்டும் என்பதுதான். பிறவி, வாழ்க்கை, துன்பம், மரணம் இவை எல்லாவற்றையும் விட்டுவிட்டு, மனிதன் மோட்சம் அடைவதுதான் ஒரே மார்க்கம் என்று கூறினார். மோட்சத்தை நிர்வாணம் என்றார்.

அவரைப் பின்பற்றுகிறவர்கள் முக்கியமாக எட்டு விரதங்களை மேற்கொள்ள வேண்டும். அவற்றில் முக்கியமானவை-

***1. அகிம்சை:*** எந்த ஜீவராசிக்கும் மனிதன் துன்பம் விளைவிக்கக் கூடாது.

***2. சத்தியம்:*** எப்போதும் உண்மையே பேசுதல் வேண்டும். அதுவும் யாரையும் துன்புறுத்தாத உண்மையைப் பேசுதல் வேண்டும்.

***3. ஆஸ்த்தேய:*** யாருமே தனக்குக் கொடுக்கப்பட்டதைத் தவிர, வேறு ஒருவரிடமிருந்து திருடியோ, வேறுவிதத்திலோ பொருள் எடுத்துக் கொள்ளக் கூடாது.

***4. பிரம்மச்சரியம்:*** ஒருவன் எப்போதுமே காமஆசையில் இருந்து விடுபட்டு பிரம்மச்சரியத்தைக் காப்பாற்ற வேண்டும்.

***5. அபரிக்கிரஹா:*** ஒருவன் உற்றார்- உறவினர்கள், வீடு, மனைகள் போன்ற எந்தவிதமான பற்றும் வைத்துக்கொள்ளுதல் கூடாது. ஜைனத் துறவிகள் ஆணாக இருந்தாலும் சரி; பெண்ணாக இருந்தாலும் சரி- இந்த விரதங்களைக் கடுமையாக அனுசரிக்க வேண்டும்.

## தீபாவளி

மகாவீரர் 72 வயது வரை வாழ்ந்தார். கி.மு.527-ல் அவர் தனது உடலை விடுத்து மோட்சத்தில் லயித்தார். அவர் மோட்சமடைந்த தினத்தைத்தான் மக்கள் விளக்குகள் வைத்துக் கொண்டாடினர். அந்த நாளே தீபாவளி!

## மகாவீரரின் உபதேசம் பரவிய விதம்

வசீகரம் நிறைந்த முகமும், மகாவீரரது எளிய உபதேசங்களும் பெரும்பாலான மக்களைப் பெரிதும் ஈர்த்தது. மதம் என்பதை அவர் மிகவும் எளிமை ஆக்கினார். அதில் எந்தவித பெரிய சடங்குகளும் இல்லாமல் மாற்றினார். இது அந்நாளைய மக்களுக்கு மிகவும் ஏற்றதாக இருந்தது.

கடவுளை ஒரு சிருஷ்டிகர்த்தாவாகவும், பாதுகாப்பவராகவும், அழிவு செய்பவராகவும் மகாவீரர் ஏற்றுக்கொள்ளவில்லை. கடவுளை வழிபடுவது சரியானது அல்ல என்று கூறினார். ஒவ்வொருவருடைய

தனி வாழ்க்கையும் உன்னதமானது. அதுதான் முக்கியமானது என்றும் கூறினார்.

எல்லா மக்களிடம் மட்டுமல்ல; எல்லா உயிரினங்களிடமும் அன்பு செலுத்த வேண்டும் என்று கூறினார்.

## ஜைன மதத்தின் முக்கிய கொள்கைகள்

மகாவீரரை ஜைன மதம் ஒரு அவதாரமாகக் கருதுகிறது. அவர்தான் மனித இனத்திற்கே ஒரு வழிகாட்டியாக மதிக்கப்பட்டார். அதற்கு முன் வாழ்ந்த 24 தீர்த்தங்கரர்கள் (பூரண ஞானம் பெற்ற ஆத்மாக்கள்) ஜைன மதத்தை நிறுவிய முக்கியஸ்தர்களாகக் கருதப்படுகின்றனர்.

ஜைன மதம் கர்மாவைப் பெரிதும் வற்புறுத்துகிறது. கர்மாதான் நமது உலக வாழ்க்கையைப் பெரிதும் பாதிக்கிறது என்றும் கூறுகிறது.

மகாவீரர் தமது வாழ்வில் எவ்வளவு தவ விரதங்கள் மேற்கொண்டாரோ அதேவித விரதங்களை மேற்கொள்ள வேண்டும் என்று ஜைன மதம் கூறுகிறது. அதன் முக்கியக் கொள்கையே அகிம்சை! எந்தவித ஜீவராசிக்கும் தீங்கு செய்யாமல் வாழ்வதே அதன் முக்கிய அம்சம்!

கி.பி.82-ஆம் ஆண்டில், மகாவீரரின் இந்த ஜைன மதம் 'ஸ்வேதாம்பர' என்றும்; 'திகம்பர' என்றும் இரண்டு பிரிவுகளாகப் பிரிந்தன. இந்தப் பிரிவுகள் ஜைன மதத்தின் ஆதாரக் கொள்கைகளையே அசைத்தன.

தென்னிந்தியாவில் உள்ள வெம்மையான பகுதிகளில் வசிப்பவர்கள் திகம்பரர்களைப் பெரிய ஞானிகளாகவும், சாதுக்களாகவும் நினைத்தார்கள். திகம்பரர் என்றால் எந்தவித ஆடையும் இல்லாமல் நிர்வாணமாக இருப்பவர்கள். அவர்கள் உணவுகளைக் குறைத்து உட்கொள்வார்கள். எந்தவிதப் பொருளையும் தமக்கென்று வைத்துக் கொள்ள மாட்டார்கள். உடைகளைக்கூட வைத்துக்கொள்ள மாட்டார்கள். திகம்பரர்கள் மோட்சம் அடைவதற்கு பெண்கள் அருகதை அற்றவர்கள் என்று கூறினார்கள்.

இதேபோல் ஸ்வேதாம்பரர்கள் எப்பொழுதுமே வெள்ளைத் துணிகளை உடுத்துபவர்கள். ஏனெனில், வட இந்தியாவில் குளிரான பகுதிகளில் வாழ்பவர்களாக இருந்ததால் அவர்கள் உடை அணிய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. வாழ்க்கையில்கூட அவர்கள் அதிக

கடினமான பழக்க- வழக்கங்களை மேற்கொள்வது இல்லை.

## ஜைனம் தோன்றிய காலம்

ஜைன மதம் என்பது மகாவீரருக்கு முன்பாகவே தோன்றி இருந்தது. அதன் கருத்துக்களைத்தான் மகாவீரர் எல்லாருக்கும் வழங்கினார். ஆனால் இவர் புத்தரைவிட அதிக சீர்திருத்தவாதியாக விளங்கினார்.

அவர் வாழ்ந்த காலத்தில் இருந்த ஜைன மதக் கொள்கைகளைத்தான் அவர் பின்பற்றினார். அதைவிட்டு, அவர் ஒரு புது மதத்தை ஸ்தாபிக்க வில்லை. 'தீர்த்தங்காரா பார்ச்வனாத்' என்பவரைத் தான் அவர் முழுவதும் பின்பற்றி உபதேசங்கள் செய்தார்.

அவரது உபதேசங்கள் அந்தக் காலத்துக்கு ஒட்டியவாறு, ஜனங்களின் மனங்களுக்கு மிக இசைந்ததாகவும் இருந்தது.

மகாவீரர் மகாநிர்வாணம் அடைந்த பிறகு பிற்காலத்தில் அவர் உண்டாக்கிய சங்கங்கள் எல்லாம் புதிய கொள்கைகள் நிறைந்தனவாக மாறின. சின்னச் சின்ன கொள்கைகளில் கூட அவை ஒன்றுக்கொன்று மாறுபட ஆரம்பித்தன. அதனால் பிற்காலத்தில் சடங்குகள் தோன்றி வளர ஆரம்பித்தன.

## தீர்த்தங்கரர்கள் சிலை

தீர்த்தங்கரர்களின் சிலைகளை இதர இந்துக் கடவுள்களுடன் சேர்த்து வைக்கத் தொடங்கினார்கள். 24 தீர்த்தங்கரர்களது சிலைகளை கோவில்களில் பார்த்தால் ஒரே உருவச் சிலைகளாகவே தோன்றும். காரணம், அவர்கள் வெறும் உடல் தோற்றங்களை உருவாக்கவில்லை.

'அவர்கள் அசரீரியாக இருந்த அமர உருவத்தையே உருவாக்கி இருக்கிறோம். எனவே எல்லாத் தீர்த்தங்கரர்களும் ஒரே உருவத்தி லுள்ளார்கள் என்று கூறினார்கள்.

சிலை வடித்தவர்கள் ஒவ்வொரு சிலைக்கும் அடியில் அவர்கள் வெவ்வேறு வித சின்னங்களை உருவாக்கினார்கள். மகாவீரரது சிலைக்கு அடியில் ஒரு சிங்கத்தின் உருவை உருவாக்கினார்கள்.

ஒவ்வொரு தினமும் ஜைனர்கள் தலைகுனிந்து வணங்குவார்கள். நவ்கர் மந்திரத்தை (தோத்திரம்) ஜபிப்பார்கள். அதற்குப் பிறகுதான் அன்றைய தினத்தின் வேலையை ஆரம்பிப்பார்கள்.

பசி, பிணி முதலான தோஷங்களிலிருந்து நீங்கி, அனைத்தையும்

உணரும் ஞானமுடைய ஜினன் உபதேசித்த வழியில் (தருமத்தில்) நடப்பவர் ஜைனர்.

## ஜைனரின் முதல் ஆசாரம்

மத்யம் (கள்), மாமிசம், மது (போதை தரும் பானங்கள்), பஞ்சோதும்பாம் (அத்தி, ஆல், அரசு, அரளி, கல்லத்தி அல்லது பேயத்தி) இவற்றின் காய், கனிகளை உண்ணாமல், தினமும் பஞ்சமந்திரம் ஜபிப்பது, சின்ன ஜீவராசிகளைத் தவிர்த்து விட்டு, குடிப்பதற்காக நன்றாக வடிகட்டிய நீர் பயன்படுத்துவது, இரவில் சாப்பிடாமல் இருப்பது, ஜீவகாருண்யம் முதலியவை ஆகும்.

## ஜைன மதத்தின் நம்பிக்கைகள்

இந்தப் பிரபஞ்சத்திலுள்ள எல்லாவித ஜீவராசிகளும், பொருட்களும் அனாதியானவை. அவற்றுக்கு ஆரம்பமும் கிடையாது; முடிவும் கிடையாது. ஆதலால் பிரபஞ்சத்தை யாரும் சிருஷ்டி செய்ய வேண்டிய தேவை இல்லை. இந்தப் பிரபஞ்சம் உண்மையில் அதனுடைய சொந்த நெறிமுறைகளுக்கு உட்பட்டு நடக்கிறது. இதனால் ஜைன மதத்திற்குப் படைத்தல், காத்தல், அழித்தல் செய்யக்கூடிய கடவுள்கள்மீது நம்பிக்கை கிடையாது.

ஆனால் ஜைன மதம் கடவுள்களையும் நம்புகிறது. ஒரு ஜீவன் தனது கர்மாக்களை அழித்துவிட்டால், அந்த ஜீவனுக்கு மெய்ஞ்ஞானம் வருகிறது. எப்பொழுதும் நிரந்தரமான ஆனந்தம் கிடைக்கிறது. அது எங்கும் நிறைந்திருக்கிறது. அதற்கு எல்லாவித சக்தியும் இருக்கிறது.

எனவே ஜைனமதம், 'ஜீவனை'க் கடவுள் என்று கூறுகிறது. இதுபோல் கடவுள் ஒன்றுதான் என்பதையும் ஜைன மதம் ஏற்றுக் கொள்வதில்லை. இந்த மதத்தில் ஆயிரக்கணக்கான கடவுள்கள் வருவார்கள். இதுவரையில் உண்டாகி இருக்கிற கடவுள்களும் அதிகம் என்று கூறுகிறது ஜைன மதம்.

உலகில் ஒவ்வொரு ஜீவனுக்கும் நிச்சயம் கடவுள் ஆவதற்கான சந்தர்ப்பம் உண்டு. ஒரு ஜைனன் ஆன்மிக வழியில் முன்னேறும்போது தமது எட்டுவித கர்மாக்களை அழிக்கிறான்.

## காதி கருமம்

1. ஞானவரணீயம்- ஞானத்தை மறைக்கும் கருமம்.

2. தரிசனாவரணீயம்- தரிசனத்தை மறைக்கும் கருமம்.

3. மோஹனீயம்- மோகத்தைச் செய்யும் கருமம், நல்ல காட்சி, நல்லொழுக்கம் இவற்றைக் கெடுக்கும் கருமம்.

4. அந்தராயம்- தடங்கல் செய்யும் கருமம்.

## அகாதி கருமம்

1. ஆயுஷ்யம்- ஒவ்வொரு பிறப்பிலும் வாழ்நாளுக்குக் காரணமான கருமம்.

2. நாமம்- உருவம், குரல், ஆதரவு, சீர்த்தி முதலியவற்றுக்குக் காரண மான கருமம்.

3. கோத்திரம்- தாயின் பிறந்த வம்சத்திற்குக் காரணமான கருமம்.

4. வேதநீயம்- குடும்ப வாழ்க்கையின் சுக- துக்கங்களுக்குக் காரண மான கருமம்.

## சித்தர்கள்

முதல் நான்கு காதி கர்மாக்கள் ஒரு ஆன்மாவின் பஞ்ச சொரூபத்தை மறைக்கின்றன. மீதி இருக்கின்ற நான்கு அகாதி கர்மாக்கள் ஒருவரது தேகம், ஆன்மா இரண்டும் சம்பந்தப்பட்டது.

ஒரு ஜீவன் தனது காதி கர்மாக்களை அழித்துவிட்டால், அவனது மற்ற அகாதி கர்மாக்கள் தாமாகவே அழிந்துவிடுகின்றன. அவன் மீண்டும் பழைய நிலைக்கு வருவதில்லை. இவ்விதத்தில் எட்டுவித கர்மாக்களையும் இழப்பவன்தான் சித்தன் ஆகின்றான்.

முதல் நான்கு காதி கர்மங்களை அழிப்பவன் 'அருகர்' (அரிஹர்) ஆகிறான். (தீர்த்தங்கரர், ஜினா முதலியவர்கள்) அரிஹர்களும், சித்தர் களும் ஜைன மதத்தில் கடவுள்கள் என்று அழைக்கப்படுகிறார்கள்.

## அருகர்கள் (அரிஹர்கள்)

ஒரு ஜீவன் தனது காதி கர்மாக்களை அழித்துவிட்டால் அவன் கேவல் ஞானம் என்பதை அடைகிறான். அவன் தனது ஆன்மாவின் இயல்பான இயல்புகளைத் திரும்பவும் பெற்று விடுகிறான். அந்த இயல்பு கள் பேரறிவு பெற்றவை. பேரானந்தம் பெற்றவை. சக்தி பெற்றவை. அவ னுக்கு உலகத்தில் உள்ள எல்லா ஜீவன்களின், உயிரற்ற வஸ்துக்களின் முக்கால, பிற்காலத் தோற்றங்கள் எல்லாம் தெரிந்துவிடுகின்றன.

இருந்தாலும், அவன் ஒரு சாதாரண மனிதனாகவே இருப்பான். மதத்தை விஸ்தாரணம் செய்வான். தனது மீதி வாழ்க்கை முழுவதும் பேரானந்தத்தில் இருப்பான். அவன்தான் அருகர் என்று கூறப்படுகிறது.

இருவகை அருகர்கள்:

1. தீர்த்தங்கரர்.

2. கேவலி.

## தீர்த்தங்கரர்

கேவல் ஞானம் அடைந்த பிறகு ஒரு மனிதன் நான்குவித மதப் பிரசாரங்களை உண்டாக்க வேண்டும். அவர்கள்-

1. சாதுக்கள்.

2. சாத்விகள் (பெண் சாதுக்கள்).

3. ஸ்ராவக் (சாதாரணமான ஆண்கள்).

4. ஸ்ராவிகாக்கள் (சாதாரண பெண்கள்).

இந்த நான்கு வகை பிரசாரக்காரர்களை உற்பத்தி செய்ய வேண்டும். அவர்கள் ஜைன மதத்தின் தத்துவங்களை எடுத்துச் சொல்ல வேண்டும். ஜைன மதத்தின் கர்ம முறைகளை எடுத்துக் கூறவேண்டும்.

தீர்த்தங்கரர்களை ஜீனர்கள் என்றும்; ஜினர்கள் என்றும்; நிர் கிரந்தாகாரர்கள் என்றும் கூறுவார்கள். 'ஜினா' என்றால் உள்மனத்தின் வேட்கைகள், ஆசைகள், விரோதங்கள் எல்லாவற்றையும் வெற்றி கொண்டவன் என்று கூறுகிறது ஜைன மதம். 'நிர்கிரந்தா' என்றால், எல்லாவித பாசங்களையும் துறந்தவன் என்று கூறுகிறது.

## கேவலி

சாதாரண கேவலிக்கும் தீர்த்தங்கரருக்கும் ஒரே ஒரு வித்தியாசம்தான் உண்டு. சாதாரண கேவலிகள் மதத்தின் பிரசாரக்காரர்களை ஏற்படுத்த மாட்டார்கள். பிரசாரமும் செய்யமாட்டார்கள். அவர்கள் எப்பொழு துமே ஒருவித பேரானந்தத்தில் மூழ்கி இருப்பார்கள். அவர்கள் தங்கள் வாழ்நாள் முழுவதையும் அதே லயிப்பில் கழித்து விடுவார்கள்.

## சாதுக்கள், சாத்விகள்

நான்குவித பிரசாரகர்களில் முதல் வகை ஆண் துறவிகள் சாதுக்கள்

எனப்படுவர். பெண் துறவிகள் சாத்விகள் எனப்படுவர். இவர்கள் எல்லாரும் தன்னடக்கம் உள்ளவர்கள். ஆசைகளை எல்லாம் துறந்தவர்கள். எந்த விதப் பொருளையும் தங்களுக்கு என்று வைத்துக்கொள்ள மாட்டார் கள். இவர்கள் தவம் செய்வது மட்டுமின்றி, மற்றவர்களுக்கு உபதேசம் செய்பவர்களாகவும் இருக்கிறார்கள். இவர்கள் ஐந்துவித மகா அற்புத விரதங்களைக் கண்டிப்பாக அனுசரிப்பவர்கள்.

## ஸ்ராவக், ஸ்ராவிகாக்கள்

இவர்கள் சாதாரண மக்களாக இருப்பார்கள். அவர்கள் உலகத்தைத் துறக்கு வேண்டியதில்லை. ஆனால் தங்கள் இல்லறக் காரியங்களை ஒழுங்காகச் செய்பவர்களாக இருக்க வேண்டும். எப்பொழுதுமே நல்ல நடத்தையைப் பின்பற்ற வேண்டும். ஒரு தூய்மையான வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும்.

## மோட்சத்திற்கு வழி

வாழ்க்கையின் கடைசி ல்ட்சியம் நாம் எல்லாருமே விடுதலை ஆகவேண்டும்; எப்பொழுதும் பேரானந்தத்தில் இருக்க வேண்டும் என்பதுதான். ஜைன மதத்தின் உண்மைத் தத்துவம் என்னவென்றால், எல்லா கர்மாக்களில் இருந்தும் (பந்தங்களிலிருந்தும்) விடுதலை செய்ய வைப்பதுதான்.

ஜைனத்தின் அடிப்படைத் தத்துவம் இன்னொன்று. மனிதனின் தர்ம வாழ்க்கை என்பது உண்மையில் விஞ்ஞானம்தான். அது நம் உடலை ஒரு ரதமாகக் கருதுகிறது. ஒவ்வொரு ஆன்மாவும் அதில் ஏறிப் பயணம் செய்கிறது. அது செல்லும் பயணம் மோட்சத்தை நோக்கி.

நாம் இந்த வாழ்க்கையில் முக்கிய நோக்கமாக ஏற்றுக்கொள்ள வேண்டியது என்னவெனில், எல்லாவித பந்தங்களில் இருந்தும் விடுதலை அடைய வேண்டும். இதற்குப் பிறகு எந்தவித ஜனனமும் எடுக்கக்கூடாது. இந்தப் பிறவியுடன் நமது மரணம், ஜனனம் என்று சுழலும் பிறவிச் சக்கரம் சுழலாமல் நிறுத்துவது.

அப்போதுதான் ஒவ்வொரு ஆன்மாவும் கடவுள் தன்மையை அடைய முடியும். தமது சுற்றுத்தன்மையும், தான் எந்தவிதத்திலும் யாருக்கும் பந்தமில்லாத பூரணமாக இருக்கிறோம் என்பதையும் நாம் நிச்சயம் உணர வேண்டும்.

ஒவ்வொருவரும் ஐந்து முக்கிய தத்துவங்களைப் புரிந்துகொள்ள வேண்டும்.

1. அருகர்கள்- எல்லாவற்றிற்கும் பரமாத்மா போன்றவர்கள்.

2. சித்தர்கள்- ஏற்கெனவே பூரண ஞானம் பெற்ற ஆன்மாக்கள்.

3. ஆச்சாரியார்கள்- உபதேசம் செய்ய வந்தவர்கள்.

4. உபாத்தியாயர்கள்- ஞானம் பெற்ற துறவிகள்.

5. சாதுக்கள்- துறவறம் மேற்கொண்டவர்கள்.

ஜைனமதம் மோட்சத்திற்கு மூன்று முக்கிய ரத்தினங்களைக் கொடுத்திருக்கிறது. அவை தத்துவங்கள்தான்.

1. எப்பொழுதும், எதையும் உண்மை நோக்குடன் பார்க்க வேண்டும்.

2. உண்மை அறிவு பெறவேண்டும்.

3. உண்மை நடத்தை கொள்ள வேண்டும்.

## ஜைன மதத்தின் முக்கிய கொள்கைகள்

1. எல்லா மதத்தின் மீதும் சகிப்புத்தன்மை நிறைந்தவர்களாக இருக்க வேண்டும்.

2. தர்மத்தில் நிலைநிற்க வேண்டும். கர்மம் பிறழாமல் இருக்க வேண்டும்.

3. தனக்கும் தன்னைச் சுற்றியுள்ள மற்றவற்றுக்கும் இடையே சமநோக்கு உடையவர்களாக இருக்க வேண்டும்.

4. எப்பொழுதும் அவர்கள் ஆன்ம திருப்தி உள்ளவர்களாக இருக்க வேண்டும்.

⌘⌘⌘



# 3

# யூத மதம்

யூத மதம் சுமார் 3500 வருடங்களுக்கு முற்பட்டது. மத்திய கிழக்குப் பிரதேசத்தில் இந்த மதம் தோன்றியது. அப்ரஹாம், மோஸஸ் ஆகிய இருவரும்தான் இதை உருவாக்கியவர்கள்.

இதை கிறிஸ்துவ மதத்தின் தாய்மதம் என்று சொல்லலாம். இந்த மதத்திலிருந்து பிறந்ததுதான் கிறிஸ்துவ மதம். யூதர்கள் யாவரும் கடவுள் ஒருவரே என்று நம்புபவர்கள். கடவுள் தங்களிடம் மட்டுமே உண்மையைக் கூறுகிறார் என்றும் நம்புகிறார்கள்.

பொதுவாக இதே போன்ற ஒரு கொள்கை தான் ஒரு மதத்தில் வன்முறைகளை உற்பத்தியாக்குகிறது. வேறு எந்த மதத்தினரைப் பார்த்தாலோ அவர்களோடு பகைமை கொண்டாலோ அதைத் தங்களது கடவுளுக்காகச் செய்வதாகக் கருதுகிறார்கள்.

### பகைமை இல்லை

ஆனால் ஆச்சரியம்! யூத மதத்தினர் மற்ற மதத்தின ரிடம் பகைமை பாராட்டுவது கிடையாது. இது ஒன்றுதான் யூத மதத்திற்குப் பெரிய பலம். அதனால்தான் யூதர்கள் எந்த வேறு சமய சமூகத்தினரோடும் ஒற்றுமையாக வாழ முடிகிறது, வாழ்கிறார்கள்.

உலகம் முழுக்க பன்னிரண்டு கோடி யூதர்கள் இருப்பதாகக்

கணக்கிட்டிருக்கிறார்கள். இவர்களில் பெரும்பாலானவர்கள் இஸ்ரேலிலும் மீதமுள்ளோர் அமெரிக்காவிலும் வாழ்கிறார்கள். யூத மதத்தை அழிக்க வேண்டும் என்பதற்காக சுமார் ஆறு கோடி யூதர்கள் கொல்லப்பட்டனர். இதற்கு ஜெர்மனியின் ஹிட்லர் ஒரு காரணகர்த்தாவாக இருந்தார்.

## யூதர்களும் பைபிளும்

யூதர்களின் சரித்திரத்தைப் பார்த்தால் அவர்கள் சொந்த சரித்திரமேதான் யூதமதத்தின் சரித்திரமும் ஆகும். யூதர்கள் அப்ரஹாமைத் தங்கள் பிதாமகராக நினைக்கிறார்கள்.

பைபிளின் முன்பகுதிகள்தான் பெருமளவில் யூதமதத்தின் அடிப்படைக் கொள்கையாக அமைந்துள்ளன. இரண்டாவதாக அமைந்தது 'ஸினாய்' மலையில் கடவுள், அப்ரஹாமுக்கு அளித்த அதே கட்டளைகள்தான்.

## சப்பத் திருநாள்

ஒவ்வொரு வாரமும் யூதர்கள் 'சப்பத்' என்பதை அனுசரிக்கிறார்கள். அதுவே அவர்களது புனித நாளாகிறது. அதைப் பற்றிய சட்டங்களையும் வழக்கங்களையும் அனுசரிக்கிறார்கள். 'சப்பத்' என்பது வெள்ளிக்கிழமை சூரிய அஸ்தமனத்தில் ஆரம்பித்து சனிக்கிழமை சூரிய அஸ்தமனம் வரை அனுசரிக்கப்படுகிறது.

கடவுள் அப்ரஹாமுக்கு அளித்த பத்து கட்டளைகளில் நான்காவது கட்டளை யூதர்களை 'சப்பத்'தை அனுசரிக்கும்படி கூறியிருக்கிறது.

ஓய்வுநாள் என்பது இந்த 'சப்பத்' நாள்தான். கடவுள் உலகை சிருஷ்டி செய்த பிறகு ஏழாம் நாள்தான் ஓய்வு எடுக்கிறார். எனவே யூதர்களும் ஏழாவது நாளைத்தான் ஓய்வு நாளாக எடுத்துக்கொள்கிறார்கள்.

'சப்பத்' என்பதற்கு 'ஹீப்ரு' மொழியில் ஓய்வு என்று அர்த்தம்.

கடவுளுக்கும் யூத மக்களுக்கும் ஏற்பட்ட ஒரு முக்கிய ஒப்பந்தம் இது. எனவே யூதர்கள் அதை அனுசரிப்பதன் மூலம் கடவுளுக்கு அளித்த உறுதிமொழிகளை நிறைவேற்றுவதாக மிகவும் சந்தோஷம் அடைகிறார்கள்.

பெரும்பாலுமான யூதர்கள் எல்லா வாரத்திலும் 'சப்பத்'தை மிக ஆவலோடு எதிர்பார்ப்பார்கள். 'சப்பத்'தை கடவுளின் வெகுமதியாகவும்-

குறிப்பாக யூதர்களைத் தேர்ந்தெடுத்து கடவுள் அந்த வெகுமதியை அளித்திருப்பதாகவும் நினைத்துப் பெருமையாக அந்த நாளைக் கொண்டாடுவார்கள்.

## பூரண ஓய்வு

சப்பத் திருநாளில் தொலைக்காட்சி இருக்காது. தொலைபேசி இருக்காது. மற்ற வேலைகளுமே இருக்காது. யூதர்கள் அன்றைய நாளில் தங்களது எந்தவித வேலையையும் நினைக்கமாட்டார்கள். அவர்கள் அந்த தினத்தை அமைதிப் பூங்காவாக எடுத்துக் கொள்வார்கள். அன்று அவர்களின் வாழ்க்கையே ஸ்தம்பித்து நிற்கும்.

'சப்பத்'தைப் பற்றிய வாழ்த்துக்கள் இவைதான்:

ஹீப்ரு மொழியில் 'சப்பத் ஷலோம்' என்றும்,

இத்திஷ் மொழியில் 'குட் ஷப்பாஸ்' என்றும் கூறுவார்கள்.

'சப்பத்' திருநாளில்தான் ஒரு குடும்பத்தில் எல்லாரும் ஒன்று கூடுவார்கள். சப்பத் நாளில் எந்தவித வேலையும் செய்யவிரும்பாத யூதர்கள் தங்களது சமையல், சுத்தம் செய்தல் போன்றவற்றை வெள்ளிக்கிழமை சூரிய அஸ்தமனத்திற்கு முன்பே செய்துவிடுவார்கள்.

நாம் எப்படி தீபாவளி கொண்டாடுகிறோமோ அதுபோல், அவர்கள் 'சப்பத்'திற்காகப் புதிய துணிமணிகள் உடுத்திக்கொள்வார்கள். அதைத் தவிர எல்லாவிதத்திலும் ஓய்வும், அமைதியும் தேவை என்பதற்காக 'சப்பத்'திற்கு முந்தைய நாளே எல்லாவித காரியங்களையும் செய்துவிடுவார்கள்.

'சப்பத்'திற்காக அவர்கள் மெழுகுவர்த்தி ஏற்றுவார்கள். 'சப்பத்' பாட்டுக்கள் பாடி தொழுகை செய்வார்கள். 'சப்பத்' நாளில் பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளை வாழ்த்துவது வழக்கம்.

## யூதர்களின் வழிபாடு

யூதர்கள் தங்கள் ஆலயங்களுக்குச் (ஸினகாக்) சென்று வணங்குகிறார்கள். ஆலய குரு 'ரபீஸ்' என்று அழைக்கப்படுகிறார். யூதர்களின் புனிதப் புத்தகம் 'ஹீப்ரு பைபிள்'. முதல் ஐந்து புத்தகங்களை 'டோரா' என்று கூறுகிறார்கள்.

ஒரே ஒரு கடவுள்தான் என்றும்; அவர்தான் இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்தார் என்றும் நினைக்கிறார்கள். அந்தக் கடவுளிடம், தங்களது

வழிபாடுகளை எப்போதும் சரியாக வைத்திருக்க விரும்புகிறார்கள்.

கடவுள் எப்போதுமே பணி செய்து கொண்டிருக்கிறார். தமது பணி மூலமே அவர் மனித இனத்திற்கு உதவுகிறார் என்று நினைக்கிறார்கள். கடவுளுடன் யூதர்கள் ஒப்பந்தம் செய்திருக்கிறார்கள் என்றும்; அந்த ஒப்பந்தத்தைக் கடைப்பிடிப்பதன் காரணமாகத்தான் கடவுள் தங்களுக்கு நன்மைகளைக் கொடுக்கிறார் என்றும் அவர்கள் நினைக்கிறார்கள்.

யூதர்கள் கடவுளின் நீதி போதனைகளைக் கடைப்பிடிக்கிறார்கள். இந்த வாழ்க்கையை எப்படியாவது புனிதம் ஆக்க வேண்டும் என்று அவர்கள் எண்ணுகிறார்கள். ஒரு பெரிய சமூகத்தின் நம்பிக்கைதான் யூதமதம்.

யூதர்களின் பிரார்த்தனைகளைப் பார்த்தால் 'நாம், நமது' என்ற வார்த்தைகள்தான் அதிகமாக இருக்கும். 'நான், எனது' என்று கூறும் வார்த்தைகளே இராது. சொல்லப்போனால் யூதமதம் ஒரு சமுதாயக் குடும்பத்தின் நம்பிக்கையாக இருந்து வருகிறது.

ஒரு குழந்தை பிறந்த எட்டாவது நாளில் அதற்கு 'சுன்னத்' நடக்கிறது. இது நாலாயிரம் வருடங்களுக்குமுன் கடவுள் அப்ரஹாமுக்கு அளித்த கட்டளைப்படி நடக்கிறது.

யூதர்களின் கடவுள் நம்பிக்கையை மேலும் வகைப்படுத்தலாம்.

## கடவுள் எப்படி இருப்பார்?

கடவுளைப் பல பகுதிகளாகப் பிரிக்க முடியாது. ஒரு கடவுளைத்தான் வணங்க வேண்டும். கடவுள் எல்லாவற்றையும் கடந்தவர். எல்லாவற்றிற்கும் மேலானவர். அவருக்கு உருவம் கிடையாது. அவர் ஆணும் அல்ல; பெண்ணும் அல்ல. அவர் இந்த உலகத்தை எந்தவித உதவியுமின்றித்தான் படைத்தார்.

அவர் எப்போதும், எங்கும் நிறைந்திருக்கிறார். அவரால் எதுவும் செய்ய முடியும். அவர் இரக்கம் நிறைந்தவராக இருக்கிறார். கெட்டவர்களைத் தண்டிக்கிறார். நல்லவர்களை ஆதரிக்கிறார்.

கடவுள் மன்னிப்பும் அளிக்கிறார். அன்பு வைத்து கடவுள்மீது சொந்தம் கொண்டாடினால் அவரை எளிதில் அடையலாம். அவரும் ஒவ்வொருவர் மீதும் அன்பு வைத்துள்ளார். ஒவ்வொருவர் சொல்வதையும் கேட்கிறார். ஒவ்வொரு தனி மனிதரிடமும் அவர்

பேசுகிறார். எதிர்பாராத விதத்திலும் அவர் பேசுவார்.

யூதர்கள் தினமும் காலை, மாலை, மதியம் ஆகிய மூன்று வேளைகளிலும் பிரார்த்தனை செய்கிறார்கள். அவர்களது பிரார்த்தனைப் புத்தகத்தின் பெயர் 'சித்துர்'.

பிரார்த்தனை எந்த விதத்தில் இருக்கும்?

**'உலகத்தை உண்டாக்கியவரே போற்றி.**

**சிருஷ்டியைக் காத்துவருபவரே போற்றி.**

**பூமி மீது இரக்கம் வைத்திருப்பவரே போற்றி.**

**எல்லா ஜீவராசிகள் மீதும் இரக்கம் வைத்திருப்பவரே போற்றி.'**

இந்த ரீதியாக அவர்களது பிரார்த்தனை முறை இருக்கும்.

யூதர்களின் தொழுகைத் தலங்களில் ஆண்களுக்குத் தனிப்பகுதி, பெண்களுக்குத் தனிப்பகுதி என்று பிரிவுபடுத்தி வைத்துள்ளனர்.

## இந்தியாவில் யூதர்கள்

இந்தியாவில் மூன்றுவித யூத வகையினர் இருந்து வருகின்றனர்.

1. பெனி இஸ்ரேலியர்கள், 2.கொச்சின் யூதர்கள், 3. வெள்ளை யூதர்கள் (அ) ஐரோப்பாவில் இருந்துவந்த வெள்ளை யூதர்கள்.

எல்லாருமே யூத மதத்தின் கொள்கைகளைப் பின்பற்றுகிறார்கள். இவர்களில் பெரும்பகுதியினர், பம்பாய், கொல்கத்தா, டெல்லி, அகமதாபாத் போன்ற நகரங்களில் வசித்துவருகிறார்கள்.

பெனி இஸ்ரேலியர்கள் என்ற வர்க்கத்தினர் பேசும் மொழி மராத்தி. கொச்சின் யூதர்கள் பேசும் மொழி மலையாளம். இவர்களெல்லாம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டில் கலிலியோ தாக்கப்பட்டபோது இந்தியாவுக்குத் தஞ்சமாக ஓடிவந்தார்கள்.

இந்தியா அவர்களுக்கு அடைக்கலம் கொடுத்தது. இந்திய யூதர்கள் பல உயர்ந்த வேலைகளில் இருந்திருக்கிறார்கள். மகாராஜாக்களுக்குப் பிரதம மந்திரிகளாக இருந்திருக்கிறார்கள். மொகலாய அரசர்களின் புதல்வர்களுக்கு ஆசிரியர்களாக இருந்திருக்கிறார்கள்.

பெரிய செல்வந்தர்களாக இருந்திருக்கிறார்கள். வாசனைத் திரவியங்களின் சர்வதேச வியாபாரிகளாக இருந்திருக்கிறார்கள். இந்தியாவில்

அவர்கள் யுத்த சேவையிலும் பெரிதும் பங்கேற்றிருக்கிறார்கள்.

### எல்லாத்துறையிலும் முன்னேற்றம்

படப்பிடிப்பில் கலந்துகொண்டு நட்சத்திரங்களாகவும் இருந்திருக்கிறார்கள். பிரசித்தி பெற்ற கவிஞர்களாகவும் இருந்திருக்கிறார்கள். நாடகக் கலைஞர்களாகவும் இருந்திருக்கிறார்கள். இவர்கள் ஞானிகளாகவும் சித்தர்களாகவும் இருந்திருக்கிறார்கள். எல்லாவிதத்திலும் இந்திய வாழ்க்கையில் பங்கு பெற்றிருக்கிறார்கள். காலப்போக்கில் இந்தியர்களைத் திருமணம் செய்துகொண்டும் இருக்கிறார்கள்.

பதினெட்டாம் நூற்றாண்டில் அரேபிய நாடுகளில் இருந்தும், ஈரானில் இருந்தும் யூதர்கள் வந்தார்கள். இவர்களுக்கு 'பாக்டாடி' யூதர்கள் என்று பெயர்.

இவர்கள் சிரியா, ஈரான், ஓமன், ஈராக்கிலிருந்தும் வந்திருக்கிறார்கள். இவர்களை 'ஈராக்கிய யூதர்கள்' என்றும் அழைக்கிறார்கள்.

யூதர்கள் பலவித விழாக்களைக் கொண்டாடுகிறார்கள். முக்கியமாக அவர்கள் எகிப்திலிருந்து தங்களது புனித பூமிக்குச் சென்ற பிரயாணத்தைக் குறிப்பதற்காக பெரிய விழா ஒன்றை அனுசரிக்கிறார்கள். சினாய் மலையிலிருந்து கடவுளின் கட்டளைகளைப் பெற்றதற்காக ஒரு விழா கொண்டாடுகிறார்கள். இன்னும் நிறைய விழாக்களும் அவர்கள் வாழ்க்கையைக் குதூகலிக்கச் செய்கின்றன.

### யூதர்கள் அழிவில் ஹிட்லர் பங்கு

ஹிட்லர் தன்னை சுத்தமான ஆரிய இனத்தவர் என்று நம்பினார். வேறு இனத்தவர் ஜெர்மனியில் வாழ்வதை அவர் விரும்பவில்லை.

எனவே அவர் வளர்த்துவிட்ட பகைமை உணர்ச்சியில், லட்சக் கணக்கான யூதர்கள் இரண்டாவது உலக யுத்தம் நடந்த (1939-1944) காலத்தில் கொல்லப்பட்டார்கள்.

"GAS Chamber' என்று ஜெர்மானியர் உண்டாக்கிய படுகொலைத் தலங்கள் உலகில் பிரசித்தம். இங்கேதான் சிறுவர்கள், பெண்கள் முதல் ஆண்கள் வரை எல்லாரும் கொல்லப்பட்டார்கள்.

பிரிட்டன், அமெரிக்கா, ரஷ்யத் துருப்புகள் ஜெர்மன் தலைநகரான பெர்லினைப் பிடித்தபோது இந்தப் படுகொலைகள் வெளிப்பட்டன.

யூதர்கள் பெரும்பாலும் நல்ல அறிவாளிகளாக இருந்தார்கள். அவர்கள் குறிப்பாக கடன் கொடுத்து வாங்கும் தொழிலிலேயே இருந்தார்கள். (இந்தியாவில் மார்வாடியைப் போன்ற தொழில்) அது சராசரி ஜெர்மானியனுக்கு அவர்கள் மீது ஒருவித பகை உணர்ச்சியை ஏற்படுத்தியது. இதனால் யூதர் ஒழிப்பு விஷயத்தில் நிறைய ஜெர்மானியர்கள் கருணை காட்டவே இல்லை.

யுத்தம் முடிந்தபிறகு யுத்தக் கொடூரங்களைச் செய்தவர்களை 'ந்யூரன்பொக்' என்ற நக்ரில் விசாரிக்கக் கோர்ட் ஏற்படுத்தினார்கள்.

ஆனால் யூதர்களைக் கொன்ற முக்கிய நபர்கள் யாவரும் (பெரும் பாலான ஜெர்மன் ராணுவ அதிகாரிகள்) தங்கள் பெயர்களை மாற்றிக் கொண்டு வெவ்வேறு தேசங்களில் குடிபுகுந்து விட்டார்கள்.

பின்னர் யூதர்கள் 'இஸ்ரேல்' என்ற தங்கள் நாட்டைப் பெற்ற பிறகு, தங்கள் அறிவாற்றலாலும் திறமையாலும், அந்த முக்கிய நபர்கள் ஒவ்வொருவரையும் கண்டுபிடித்துக் கொன்றிருக்கிறார்கள். அல்லது விசாரணைக் கோர்ட்டுக்கு இழுத்துவந்து தண்டனை அளித்திருக் கிறார்கள்.

**ப**ல மதங்களுக்குத் தாயாக விளங்கிய யூத மதம் எப்படித் தனி மதம் ஆனது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். கடவுளைப் பெயர் சொல்லி அழைக்க யூத மதம் அனுமதிப்பதில்லை. கடவுளைக் குறிப்பதற்கு G-D என்று போடுகிறார்கள். கி.மு. நான்காம் நூற்றாண்டுக்கு முன்னரே ஏற்பட்ட பழக்கம் இது.

சுமார் கி.மு. இரண்டாயிரத்தில், இஸ்ரேலியர்கள் மகான் அப்ரஹாமுடன் கூட்டுச் சேர்ந்து ஒரு உடன்பாடான தெய்வீக வழிமுறையைத் தொடங்கினார்கள். அப்ரஹாம் என்பவர் அந்நாளில் பல தேசங்களுக்கு ஒரு முக்கிய அறநெறி அதிபதியாக விளங்கினார். அவர் அப்படி இருந்ததன் காரணமாக யூத மதத்தின் கிளை மதங்கள் எல்லாம் 'அப்ரஹாமிக் மதங்கள்' என்று பெயர் பெற்றன.

கிறிஸ்துவ மதம், இஸ்லாமிய மதம், பஹாய் மதம் ஆகியவற்றுக்குத் தாயாக யூத மதம் விளங்குகிறது.

### மோஸஸ் தீர்க்கதரிசி

மோஸஸ் என்பவர் அறநெறி தீர்க்கதரிசியாக விளங்கிய மகான்! அவர்தான் எகிப்தின் அடிமைத் தனத்திலிருந்து தம் மக்களை வெளியே

கொண்டு வந்தார். அவருக்குத்தான் கடவுளின் கட்டளைகள் கூறப்பட்டன.

முதன்முதலில் கிறிஸ்துவ மதம் யூத மதத்தின் ஒரு கிளையாக ஏற்படுத்தப்பட்டது. இது ஜெரூசலத்தை மையமாகக் கொண்டது. 'பால்' என்பவர் இதில் இருந்த பழமைக் கொள்கைகளைப் புறந்தள்ளிவிட்டு இந்த மதத்தை சாதாரணமானவர்கள் இடையே பரப்ப ஆரம்பித்தார்.

இதனால் பல புரட்சிகள் கிளம்பின. யூதக் கிறிஸ்துவர்கள் எல்லாருமே கொல்லப்பட்டார்கள். பால் என்பவரால் தொடங்கப்பட்ட இயக்கம் முன்னேறியது. அதுதான் பின்னர் கிறிஸ்துவ மதமாக மாறியது.

யூதர்கள் எல்லாரும் இதற்காக வேதனைப்பட்டார்கள். அவர்கள் உலகத்தில் உள்ள பல்வேறு இடங்களில் சென்று வாழ ஆரம்பித்தார்கள். அவர்கள் மதத்தின் இருப்பிடமாக ஜெரூசலத்தை வைத்துக்கொள்ள முடியவில்லை. காரணம், யூதர்கள் ஜெரூசலத்தில் கால் வைப்பது தவறு என்று யூதர்களே கூற ஆரம்பித்தார்கள்.

யூத மதம் பின்னர் பல பிரிவுகளாகப் பிரிய ஆரம்பித்தது. புதியவர்களை யூதர்கள் தங்கள் மதத்தில் சேர்க்கவில்லை. அவர்கள் ஆலயங்களே யூத வாழ்க்கைக்கு ஒரு முக்கிய மையம் ஆகியது. இதன் மூலம் தன் செல்வாக்கும், அதிகாரமும் உயர்ந்த மத போதகர்களிடமிருந்து விடுபட்டு, ஆங்காங்கே உள்ள பண்டிதர்கள், உபதேசிகள் ஆகியோரின் தலைமையில் செல்ல ஆரம்பித்தது. இதுதான் 'ரப்பி' யூத மதம் என்று மாறியது.

## யூதர்கள் படுகொலை

யூத மதத்தின் ஆலயங்கள் அழிக்கப்பட்ட நாள் தொடங்கி ரஷ்யாவிலும், ஐரோப்பாவிலும் யூதர்கள் கிறிஸ்துவர்களால் கொல்லப்பட்டார்கள். பல கட்டுக் கதைகளும் இதற்கு உதவி செய்தன. யூதர்கள் தங்கள் மதச் சடங்குக்கு மனிதபலி கொடுக்கிறார்கள் என்ற வதந்தியை கிறிஸ்துவர்கள் பரப்பினார்கள்.

ஏசு கிறிஸ்து கொல்லப்பட்டதற்குக்கூட யூதர்கள்தான் காரணம் என்று குற்றம் சாட்டினார்கள். இது பிற்காலத்தில் 1930-40களில் ஜெர்மனியில் நாசிக்களின் தலைவரான அடால்ஃப் ஹிட்லரை மிகவும் தூண்டியது. ஏற்கெனவே யூதர்களின்மீது ஜெர்மானியர் பகை வைத்திருந்தார்கள். இனத் தூய்மைமீது வைத்த நம்பிக்கை அடால்ஃப்

ஹிட்லருக்கு யூதர்கள் மீதான கோபத்தைப் பெரிதும் தூண்டியது.

ஹிட்லர் ஒரு பெரிய திட்டத்தை ரகசியமாக ஏற்படுத்தி, ஐரோப்பாவில் உள்ள யூதர்களையெல்லாம் ஒரு ரகசிய இடத்துக்குக் கொண்டு வந்து கொல்ல ஆரம்பித்தார். அறுபது லட்சம் யூதர்கள் அநியாயமாகக் கொல்லப்பட்டார்கள். இது உலகத்திலேயே மதம் சார்பாக நடந்த ஒரு மிகப்பெரிய அநியாயப் படுகொலை!

## ஸியோனிஸ்ட் இயக்கம்

யூதர்கள் மிகவும் பாதிக்கப்பட்டதால் 'ஸியோனிஸ்ட் இயக்கம்' ஏற்பட்டது. அவர்களது முதல் குறிக்கோள், பாரசீகத்தில் தங்களுக்கு ஒரு தாய் நாட்டை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதே. இதன் காரணமாக இரண்டாவது உலக யுத்தத்திற்குப் பிறகு 1948 மே 18-ல் இஸ்ரேல் என்ற பெயரில் தலைநகரம் உருவாக்கப்பட்டது.

மொத்தம் ஒரு கோடியே எண்பது லட்சம் யூதர்களே உலகெங்கும் இருக்கிறார்கள். அவர்களில் பெரும்பாலானோர் (70 லட்சம் பேர்) வட அமெரிக்காவிலும், நாலரை லட்சம் மக்கள் இஸ்ரேலிலும் இருக்கிறார்கள்.

## யூதர்களின் நம்பிக்கைகள்

ரப்பி ஹில்லேல் என்பவரைப் பற்றி ஒரு கதை சொல்லப்படுகிறது. யூதர் அல்லாத ஒரு நபர் ரப்பியை அணுகி தனக்கு 'டோரா' பற்றி உபதேசிக்க வேண்டும் என்று கூறினார். டோரா என்பது யூதர்களின் நம்பிக்கைக் கொள்கைகள். பைபிளின் முதல் ஐந்து பாகங்களே டோராவாகக் கருதப்பட்டது. ரப்பியிடம் இதுபற்றிக் கேட்கும்போது அந்த நபர் ஒரு காலால் நின்று கொண்டிருந்தார்.

அதற்கு ரப்பி என்பவர் உடனே பதில் சொன்னார். "உனக்குப் பிடிக்காததை மற்றவருக்கு நீ செய்யாதே. மீதியெல்லாம் வெறும் விளக்க உரைகள்தான். இப்போது நீங்கள் போகலாம். நிறைய படியுங்கள்" என்று கூறினார்.

'ரப்பி மோஷேல் பென் மேமான்' என்பவர் யூத மதத்தினரால் வெகு காலமாக ஒரு முக்கிய யூதப் பண்டிதராகக் கருதப்பட்டார். அவர் மதத்தைப் பற்றி பதின்மூன்று நியதிகள் எழுதினார். அவர் எழுதியதுதான் கிட்டத்தட்ட பல நூற்றாண்டுகளாக யூதர்களுக்கு ஒரு மகத்தான நியதிக் கொள்கையாக இருந்து வருகிறது.

1. கடவுள் இருக்கிறார்.

2. கடவுள் ஒருவர்தான். அவர் தாமாகவே இருக்கிறார்.

3. கடவுள் என்பவர் அமானுஷ்யமானவர்.

4. கடவுள் நிரந்தமானவர்.

5. கடவுள் ஒருவருக்குத்தான் நாம் நமது பிரார்த்தனைகளைச் செலுத்த வேண்டும். வேறு யாருக்கும் அல்ல.

6. முன்னால் சென்ற மகான்களது வார்த்தைகள் எல்லாம் உண்மையே.

7. முன்னால் சென்ற மகான்களில் மோஸஸ் என்பவர்தான் மிக உன்னதமானவர். அவரது வார்த்தைகள் எல்லாம் மெய்யாகி இருக்கின்றன.

8. எழுதப்பட்ட டோரா (பைபிளின் முதல் ஐந்து பாகம்) என்பதும் வாய்மொழியால் கூறப்பட்ட டோராவும் மோஸஸுக்கு அளிக்கப் பட்டன.

9. இனிமேல் டோரா என்பது புதிதாகத் தரப்படுவதற்கு இல்லை.

10. மனிதர்களின் எண்ணங்களையும், செயல்களையும் கடவுள் அறிவார்.

11. கடவுள் எப்போதுமே நல்லவர்களுக்கு வெகுமதி அளிக்கிறார். தீயவர்களுக்குத் தண்டனைகள் அளிக்கிறார்.

12. பிற்காலத்தில் எப்போதாவது ஒரு தீர்க்கதரிசி பிறப்பார்.

13. அப்போது இறந்தவர்கள் எல்லாரும் உயிர்கொடுத்து எழுப்பப்படுவார்கள்.

## கிறிஸ்துவ மதமும் யூத மதமும்

கிறிஸ்துவர்களும் யூதர்களும் ஹீப்ரு வேதத்தில் நம்பிக்கை வைத்திருந்தார்கள். இருந்தாலும், இந்த நம்பிக்கைகளில் ஏராளமான வித்தியாசங்கள் வந்துவிட்டன.

நாம் செய்யும் செய்கையும் நமது ஒழுக்கமும் முக்கியமானவை என்று யூதர்கள் கூறுகிறார்கள். ஆனால் கிறிஸ்துவர்கள், நமது ஒழுக்கம்தான் முக்கியம். செய்கை என்பது ஒழுக்கத்தில் இருந்துதான்

பிறக்கிறது என்று கூறினார்கள்.

கிறிஸ்துவர்கள், ஆதாம்- ஏவாள் செய்த பாவத்தைப் பற்றிக் கூறி அதனால்தான் எல்லாரும் கடவுளின் பழிப்புக்கு ஆளானோம் என்று கூறுகிறார்கள். ஆனால் யூதர்களுக்கு இந்தக் கதைமீது நம்பிக்கை இல்லை.

நல்லெண்ணங்களில் நம்பிக்கை வைத்தவர்கள் எல்லாருமே கடவுளின் சிருஷ்டிகள் என்று யூதர்கள் நம்புகிறார்கள்.

தங்களது வாழ்க்கையைப் புனிதமாக்கிக் கொண்டவர்கள் கடவுளை அடைகிறார்கள் என்று கூறுகிறார்கள். கடவுளுக்கும் மனிதருக்கும் இடையே எந்த இடையீட்டு ஆசானும் தேவையில்லை என்று கூறுகிறார்கள்.

## யூதர்கள்- கிறிஸ்துவர்கள் தற்கால உறவு

கிறிஸ்துவ வேதத்தில் யூதர்களுக்கு எதிராகப் பல பகுதிகள் சேர்ந்து விட்டன. இதனால் பல நூற்றாண்டுகளாக இருந்த வேறுபாடுகள் எல்லாம் வளர்ந்து பெரிய பிளவுகளை உண்டாக்கின. இதனால் முக்கியமாக யூதர்கள்தான் பெரும்பாலும் பாதிக்கப்பட்டனர்.

தற்காலத்தில் கிறிஸ்துவ அமைப்புகளில் ஒரு சிறுபான்மைப் பிரிவினரே கிறிஸ்துவின் மரணத்திற்கு யூதர்கள்தான் காரணம் என்று கூறுகின்றனர்.

மற்றபடி தற்கால கிறிஸ்துவர்கள், யூதர்களை பழைய விரோதத்துடன் பார்க்கவில்லை என்றாலும், இன்னும் கிறிஸ்துவ- யூத மதங்களிடையே ஒற்றுமை உண்டாவதற்கு நிறைய முயற்சிகள் எடுக்க வேண்டி உள்ளது.

⌘⌘⌘



# 4

# சீக்கிய மதம்

உலகத்தில் மிக சமீபகாலத்தில் தோன்றியது சீக்கிய மதம். 15-ஆம் நூற்றாண்டில்- அதாவது, சுமார் 600 வருடங்களுக்குமுன் இந்தியாவில் தோன்றிய மதம் இது.

சீக்கியர்கள் தாங்கள் இந்துக்களிடமிருந்து எல்லாவிதத்திலும் மாறுபட்டவர்கள் என்று கூறிக் கொள்வார்கள். ஆனால் அவர்கள் மதம் உண்மையில் இந்து மதத்தை விட்டு வேறுபட்டது அல்ல. சீக்கிய மதத்தில் சொல்லப்பட்டிருக்கிற எல்லா விஷயங்களும் இந்து மதத்தில் அடங்கியவைதான்!

முக்கியமாக சீக்கியர்கள் உருவ வழிபாட்டை ஆதரிப்பதில்லை.

இந்து மதத்திலும் உருவ வழிபாடு என்பது ஓரளவு வரைதான். மனிதனின் மனம் பக்குவம் அடைய அடைய, உருவ வழிபாடும் அவர்களிடமிருந்து விலகிவிடும்.

உலகத்தில் சுமார் இரண்டு கோடி சீக்கிய மக்கள் உள்ளனர். இதில் எண்பது சதவிகிதத்தினர் பஞ்சாப் மாநிலத்தில் இருக்கிறார்கள். பிரிட்டனில் ஒரு லட்சமும் கனடாவில் 2.25 லட்சம் சீக்கியர்களும் இருக்கிறார்கள்.

‘சீக்’ என்றால் ‘சீடன்’ என்று பொருள். இது ‘சீஷன்’ என்ற வடமொழியிலிருந்து பிறந்தது.

சீக்கியர்களை எளிதில் அடையாளம் கண்டு கொள்ளலாம்.

அவர்கள் தாடி வளர்த்திருப்பார்கள்! தலைமுடியை வெட்டிக்கொள்ள மாட்டார்கள். தலைப்பாகை அணிந்திருப்பார்கள்.

சீக்கியர்கள் தங்களது வழிபாட்டுத் தலத்தை குருத்துவாரா என்கிறார்கள்.

குருத்துவாராவில் பூசாரிகள் யாரும் கிடையாது. பெரிய குருத்துவாராவில் ‘க்ரந்தி’ என்று ஒருவர் இருப்பார். இந்த க்ரந்தி சீக்கிய மத நூல்களை நிறைய படித்திருப்பார். அந்த நூல்களைப் படித்துக் காட்டுவதில் திறமை வாய்ந்தவராக இருப்ப்ார். மற்றபடி க்ரந்திக்கென்று தனிப்பட்ட முறையில் எந்தவித அந்தஸ்தும் கிடையாது.

சீக்கிய மதத்தில் மிக முக்கியமான நூல் ஆதிக்ரந்தம்! இதை ‘குரு க்ரந்த் சாகிப்’ என்றும் சொல்வார்கள். சீக்கியர்கள் தங்கள் ஆதிக்ரந்தத்தை சீக்கிய குருவின் உருவமாக எடுத்துக்கொள்வார்கள். ஒரு சீக்கிய குருவுக்கு உள்ள மரியாதையை அந்த ஆதிக்ரந்தத்துக்குக் கொடுப்பார்கள்.

சீக்கியர்கள் மதமாற்றத்தை விரும்புவதில்லை. பிறர் தாங்களாகவே மதம் மாறினால் அதை ஏற்றுக்கொள்வார்கள். மதம் மாற்றும் இயக்கமாக சீக்கியர்கள் செயல்படுவதில்லை.

## சீக்கிய மதத்தின் கொள்கைகள் என்ன?

சீக்கிய குருக்களின் உபதேசங்களைப் பின்பற்றுவது, கடவுளைத் தியானம் செய்வது, பரிசுத்த நூல்களைப் படித்து தியானிப்பது, இதர மக்களுக்கு சேவை செய்வது ஆகியவைதான் அவர்களது கொள்கைகள்.

சக்தி வாய்ந்த ஒரே கடவுள்தான் உலகத்தை உண்டாக்கினார் என்று சீக்கியர் கூறுவார்கள். ஆணும் பெண்ணும் சமம். கடவுளின் பார்வையில் எல்லாருமே சமம்.

பூசாரி இன்றிக் கடவுளை நாம் அடையலாம்; ஒவ்வொருவரும் கடவுளோடு நேராகத் தொடர்பு வைத்துக் கொள்ளலாம் என்பது அவர்களின் கொள்கை. அதனால் சீக்கிய மதத்தில் பூசாரிகளோ மத போதகர்களோ உண்டாகவில்லை.

உலகத்தில் நாம் வாழ வேண்டும். அது பொறுப்பு மிகுந்த

வாழ்க்கையாக இருக்க வேண்டும். உலகத்தில் நாம் பற்றற்று வாழ வேண்டும். மற்றபடி உலகத்தைத் துறக்க வேண்டியதில்லை என்று சீக்கியர்கள் கூறுவார்கள்.

மதச்சடங்குகளில் அவர்களுக்கு நம்பிக்கை இல்லை. மதச்சடங்குகள் எல்லாம் அர்த்தமற்றவை என்பது அவர்களது கருத்து.

நல்ல உலகம் என்பது எல்லாருக்கும் பொதுவாக ஒரே தர்மத்தைதான்- ஒரே வழக்கத்தைதான் கொடுக்க வேண்டும் என்று கூறுவார்கள். சமூக நெறிகளை மட்டும் சீக்கியர்கள் ஆதரிக்கிறார்கள். வேறு வழியில்லாவிட்டால் கடைசிபட்சமாக ஒருவர் வன்மையான செயல்களில் ஈடுபடலாம் என்பது அவர்களின் கொள்கை.

மரணம் என்பது நமது முடிவல்ல. மரணம் என்பது வாழ்க்கையில் ஏற்படும் மாறுதல். அதன்மூலம்தான் கடவுளை ஒருவர் மிகவும் நெருங்க முடியும் என்பது அவர்களின் கோட்பாடு.

## சீக்கியர்களும் கடவுள்களும்...

ஒரே ஒரு கடவுள்தான் இருக்கிறார். அவர்தான் உலகத்தை உண்டாக்கினார். உலகம் அவரைத்தான் சார்ந்திருக்கிறது. கடவுள் எப்போதுமே நிரந்தரமாக இருக்கிறார். அவர் எப்போதும் இருப்பதற்கு எந்த வித துணையும் அவருக்குத் தேவையில்லை. கடவுளுக்கு உருவம் இல்லை.

கடவுளுக்கு ஆண், பெண் வித்தியாசம் கிடையாது. கடவுள் பூமிக்கு வருவதற்காக எந்தவித உருவமும் எடுத்ததில்லை. எடுக்கவும் மாட்டார்.

கடவுளுக்கு விருப்பமும் கிடையாது. வெறுப்பும் கிடையாது. கடவுள் மனித சமூகத்தை அடைவதற்குத் தமது வார்த்தைகளைத்தான் உபயோகிக்கிறார். இந்த வார்த்தைகளை நமக்கு எடுத்துச் சொல் பவர்கள்தான் குரு என்று அழைக்கப்படுகிறார்கள்.

எந்த மனிதன் கீழ் உள்ளவற்றில் நம்பிக்கை வைத்துள்ளானோ அவன்தான் சீக்கியன்.

- கடவுள் எப்போதும் அனாதியாக இருக்கிறார்.
- குருநானக்கில் இருந்து குரு கோவிந்த்சிங் வரை பத்து குருக்கள்.
- குருக்ரந்தசாகிப் என்ற நூலின் மீது பக்தி.
- பத்து குருக்கள் சொன்ன உபதேசங்களையும், நெறிகளையும் பின்பற்ற வேண்டும்.

● பத்தாவது குருவாக இருந்தவரின் உபதேசங்கள் மிக முக்கியம்.

● சீக்கியன் வேறு எந்த மதத்திலும் நம்பிக்கை வைக்கக்கூடாது.

## சீக்கிய குருக்கள்

சீக்கிய மதத்தில் பத்து குருக்கள்தான் இருந்தார்கள். அவர்கள் எல்லாரும் மனிதர்கள்தான். கடவுள்கள் அல்ல. அவர்கள் கடவுளின் அவதாரம் என்றும் சொல்லப்படுவதில்லை. குருக்களை வணங்கக் கூடாது. குருக்கள் உண்மையில் உயர்ந்த மதிப்புள்ளவராக இருந்தாலும், சீக்கியர்கள் குருக்களை வணங்குவது இல்லை.

குருக்களை உயர்ந்த ஸ்தானத்தில் வைத்தாலும், அவர்கள் படங்களை வைத்திருந்தாலும் கடவுளைப் போல் நினைத்து அவரை வணங்குவது இல்லை.

## சீக்கியர்களின் பத்து குருக்கள்

1. குருநானக், 1469-1539
2. குரு அங்கத், 1539-1552
3. குரு அமர்தாஸ், 1552-1574
4. குரு ராம்தாஸ், 1574-1581
5. குரு அர்ஜுன், 1581-1606
6. குரு ஹர்கோபிந்த், 1606-1644
7. குரு ஹர்ராய், 1644-1661
8. குரு ஹர்கிருஷன், 1661-1664
9. குரு தேஜ் பஹதூர், 1664-1675
10. குரு கோவிந்தசிங், 1675-1708

## முதல் குரு

சீக்கியர்களின் முதல் குருவான குருநானக் சுமார் 500 வருடங்களுக்குமுன் வாழ்ந்தவர். அவர் திடீரென்று சுல்தான்பூரிலுள்ள பெய்ன் நதிக்கரையில் மூன்று நாட்கள் காணாமல் போய்விட்டார். பிறகு திரும்பி வந்தபோது அவர் உபதேசங்கள் செய்ய ஆரம்பித்தார்.

கடவுள் எந்தவித மதங்களுக்கும் உட்படாதவர். கடவுள் எதிர்பார்ப்பது எல்லாம் தன்மீது பூரணமாகப் பக்தி செலுத்த வேண்டும் என்பதே. இந்த முக்கிய உபதேசங்களைத்தான் அவரது வாழ்க்கை முழுவதும் கூறிக்கொண்டிருந்தார்.

அவர் நிறைய பாடல்களும் எழுதினார். தமது முஸ்லீம் சகாக்களோடு அந்தப் பாடல்களுக்கு அவர் இசை அமைத்தார். பிறகு அவர் இந்தியா முழுவதும் சுற்றினார். ஸ்ரீலங்கா சென்றார். பாக்தாத் சென்றார். மெக்கா சென்றார். இந்துக்களுடனும் முஸ்லீம்களுடனும் அவர் நிறைய விவாதம் செய்தார். அவர் கொள்கைகளை ஏற்றுக்கொண்டவர்கள் சீக்கியர்களானார்கள்.

## சீக்கியரின் கடைசி குரு

கடைசி குருவாக வந்தவர் கோவிந்த்சிங் என்பவர். அவரோடு குருக்களின் வம்சம் முடிந்தது. 'இனி யாரும் குருவாக வரமாட்டார்கள்' என்று அவரே கூறினார். இனி குருவுக்கான ஸ்தானம் சீக்கிய மத நூல்களிலும் ஆதிக்ரந்தத்திலும், சீக்கிய சமூகத்திலும் முடிந்து போய்விடும் என்று கூறினார்.

தற்காலத்தில் சீக்கியர்களின் மத நூலான ஆதிக்ரந்தம்தான் குருவாகக் கருதப்படுகிறது. இந்த நூலைப் படித்து அவர்கள் தெளிவு பெறுகிறார்கள். தங்களது பரிசுத்தமான நூலின் அந்தஸ்தை எப் போதும் காப்பதற்கு அவர்கள் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

உலகத்தில் அறிஞர்கள் சீக்கிய மதத்தைப் பற்றி எங்ஙனம் கூறுகிறார்கள்?

சீக்கிய மதம் உண்மையில் பக்தி இயக்கத்தைச் சேர்ந்தது. இது இந்துக்களின் பக்தி இயக்கமும், இஸ்லாமிய மதத்தின் 'ஸுபி' இயக்கமும் சேர்ந்து இணைந்தது.

மாசு நீக்கிய சுத்த வடிவான இந்து மதமே இந்த சீக்கிய மதம் என்று சில சீக்கியர்கள் கூறுகிறார்கள். இந்துவின் அறநெறிகளைத்தான் சீக்கியர்கள் ஓர் அங்கமாகக் கடைப்பிடிக்கிறார்கள் என்றும் கூறு கிறார்கள். ஆனால், இந்தக் கொள்கையை எதிர்ப்பவர்களும் உண்டு. சீக்கிய மதம் இந்து மதத்திலிருந்தும் வரவில்லை. இஸ்லாம் மதத்திலி ருந்தும் வரவில்லை என்கிறார்கள்.

ஆனால் சீக்கியர்கள் எல்லாருமே இந்துக்களின் பெயர் தாங்கித்தான் வருகிறார்கள். சீக்கியரின் பத்து குருக்களின் பெயர்களும் இந்துக்களின் பெயர்களே!

ЖЖЖ



# 5

# கிறிஸ்தவ மதம்

கிறிஸ்துவ மதம் பற்றி நமக்குத் தெரிந்ததெல்லாம் நான்கு காஸ்பல்கள் (Gospels) மூலமாகத்தான். இவற்றில் முக்கியமாக மூன்று காஸ்பல்களில் ஏசுவைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

அவை- மார்க், மார்டின், லூக் என்பவர்கள் எழுதிய காஸ்பல்கள்தான். இந்த மூன்று பேரும் கிறிஸ்து இறந்த பிறகு- கிட்டத்தட்ட 60 அல்லது 100 ஆண்டுகளுக்குப் பிறகுதான் அவரைப் பற்றி எழுதி உள்ளார்கள். இந்த மூவரும் வெவ்வேறு வித குணங்கள் உடையவர்கள் என்பதற்கு இவர்கள் ஏசுவைப் பற்றி வெளியிட்ட மாறுபட்ட தகவல்களைச் சான்றாகச் சொல்லலாம். இவர்கள் கிறிஸ்துவைப் பற்றி முக்கிய விஷயங்களில் ஒத்துச் சென்றாலும், சிலவற்றில் இவர்கள் ஒருவருக்கொருவர் வேறுபடுகிறார்கள்

உலகத்தில் எல்லா நாடுகளிலும் கிறிஸ்து பிறந்த தேதி டிசம்பர் 25 என்று பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தாலும், அவரது சரியான பிறந்த தேதி இன்னும் உறுதியாகவில்லை.

கிறிஸ்து எந்தத் தேதியில் பிறந்தார் என்பது ஒரு ஆவணத்திலும் கிடைக்கப் பெறவில்லை. பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு ஏசு கிறிஸ்து, நான்காவது பி.சி.யிலோ அல்லது அதற்கு முன்போ பிறந்திருக்கிறார் என்று கூறப்பட்டது.

ஏசு கிறிஸ்துவைப் பற்றி கலீலியன் ஏசு (Jesus of Galiei) என்றும்; ஜீசஸ் ஆஃப் நாசெரத் (Jesus of Nazarath) என்றும் கூறுவார்கள். இவர் பெத்ல ஹாமில் பிறந்தார். பெத்லஹாம் என்பது ஜெருசலத்திலிருந்து ஆறு மைல் தள்ளியுள்ளது.

ஜோசப் என்பவர்தான் ஏசு கிறிஸ்துவின் தந்தை. கிறிஸ்து பிறப்பதற்கு முன் அவரது தாயான மேரி முன்பாக ஒரு தேவதை தோன்றியது.

மேரி அப்போது கன்னியாக இருந்தாள். அப்போது அந்த தேவதை தோன்றி உனக்கு ஒரு குழந்தை பிறக்கும். அதுதான் கடவுளின் குமாரன் என்றது.

மேரியின் கணவர் ஜோசப் எளிய தச்சுத் தொழிலாளியாக இருந்தார். கணவன்- மனைவி இருவரும் தங்குவதற்கு இடம் இல்லாமல் ஒரு மலைச் சாரலில் உள்ள குகையில் தங்கி இருந்தார்கள். அந்த இடம் ஒரு தொழுவமாகப் பயன்படுத்தப்பட்டு வந்தது. கிறிஸ்து பிறந்தபோது நல்ல நிமித்தங்களும் அற்புதங்களும் நிகழ்ந்தன. ஒரு தேவதையின் சொல்லைக் கேட்டு இடையர்கள் அந்தக் குகைக்கு வந்து புனிதக் குழந்தையைத் தரிசித்து மண்டியிட்டு வணங்கினார்கள்.

மாகி எனப்படும் அறிஞர்கள் கீழ்த் திசையிலிருந்து வந்தார்கள். "யூதர்களின் அரசனாகப் பிறந்தவர் எங்கே இருக்கிறார்? நாங்கள் கீழ்த் திசையில் அவரது நட்சத்திரத்தைக் கண்டோம். அவரைத் தொழு வதற்காக வந்திருக்கிறோம்" என்றார்கள். ஜெருசல அரசனின் பூசாரிகள், "அவர் பெத்லஹாமில்தான் பிறந்திருப்பார்; அங்குதான் இருப்பார்". என்று கூறினார்கள். மாகி அறிஞர்கள் நட்சத்திரம் காட்டும் திசையில் பிரயா ணித்து குழந்தை ஏசு பிறந்திருக்கும் இடத்தைக் கண்டுபிடித்தார்கள்.

கிறிஸ்து என்பவர் வருவார் என்றும்; நீண்ட நாட்களாக எதிர்பார்க்கப்படுகிறார் என்றும் தீர்க்கதரிசியான ஒரு மகான் கூறினார். அவர் பெயர் ஜான். ஏசு அவரிடம்தான் ஞான ஸ்நானத்திற்கு அழைத்து வரப்பட்டார். அந்த கிறிஸ்து மகான் இவர்தான் என்று ஜான் புரிந்துகொண்டார்.

ஏசு தமது இயக்கத்தைத் தொடரும்முன் அடர்ந்த கானகம் சென்றார். அங்கே 40 நாட்களும் 40 இரவுகளும் உபவாசம் இருந்து பிரார்த்தனை செய்தார். தனக்கு ஏற்படும் எல்லா உடல் உணர்ச்சிகளையும் அடக்கிக் கொண்டார்.

அவர் கானகத்திலிருந்து திரும்பியதும் அவரைச் சீடர்கள் சூழ்ந்துகொண்டார்கள். அவர்களில் 12 பேரை ஏசு கிறிஸ்து தமது

சீடர்களாகத் தேர்ந்தெடுத்தார். அவர்கள்தான் அப்போஸில்ஸ் என்று அழைக்கப்பட்டனர். குடும்பத் தொடர்புகளையும் அதைச் சார்ந்த கடமைகள் எல்லாவற்றிலுமிருந்து முற்றிலுமாகத் தங்களை விடுவித்துக் கொள்ளவேண்டும் என்று தமது சீடர்களுக்குக் கட்டளையிட்டார் ஏசு.

மதச் சீர்திருத்தம் பற்றிக் கூறினார். கடவுளின் தன்மை பற்றி எடுத்துரைத்தார். ஏசுவின், நோயைக் குணப்படுத்தும் மகிமையைக் கண்டு பொதுஜனங்கள் அவரை வரவேற்றார்கள். ஏசு கிறிஸ்து நிறைய கதைகள் மூலம் தமது உபதேசங்களை வழங்கினார்.

'ஒவ்வொரு மனிதருக்குமே நிச்சயம் கடவுள் அருள் உண்டு' என்று கூறினார். 'ஒவ்வொரு மனிதனும் நிச்சயம் காப்பாற்றப்படுவான்' என்றும் ஏசு கூறினார். ஏசு அவ்வப்போது நிறைய அற்புதங்கள் செய்தார். கானா என்ற இடத்தில் ஒரு திருமண விருந்தில் அவர் தண்ணீரை மதுவாக்கினார்.

ஐந்தாயிரம் பேர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ஐந்து ரொட்டிகளும் இரண்டு மீன்களும் அவரது சக்தியால் வழங்க முடிந்தது. எங்கு சென்றாலும் அவர் ஏழை- எளியவர்களையும், ஊனமுற்றோர்களையும் தான் அணுகினார்.

ஏசு கிறிஸ்து உபதேசங்களை பாரிஸிஸ் (Pharisis) என்பவர்கள் எதிர்க்க ஆரம்பித்தார்கள். யூத இனத்தைச் சேர்ந்த பண்டிதர்களும் பூசாரிகளுமே இந்த பாரிஸிஸ்கள்! ஏசு கிறிஸ்து ஏழைகளிடம் அதிகம் உறவாடுகிறார் என்பதும் அவர்களுக்குப் பிடிக்கவில்லை.

கடவுளின் பெயரால் பாரிஸிஸ்கள் மக்களை ஏமாற்றுகிறார்கள் என்று ஏசு கிறிஸ்து அடிக்கடி குறிப்பிட்டு பேசினார். இதெல்லாம் பாரிஸிஸ்களுக்கு ஆத்திரத்தை உண்டு பண்ணியது.

அவர்கள் ஏசுவின்மீது நிறைய குற்றம்சாட்ட ஆரம்பித்தார்கள். 'இவர் வெறும் புரட்சிக்காரரர். நமது சப்பத் நாளில்கூட நோயாளிகளைக் குணப்படுத்தியிருக்கிறார் என்றார்கள். (சப்பத் நாள், கடவுள் யூதர்களுக்கு மட்டுமே பிரத்தியேகமாகக் கொடுத்த நாள் என்பது யூதர்களின் நம்பிக்கை. அது, கடவுள் உலகைப் படைத்து விட்டு ஓய்வெடுக்கச் சென்ற நாள். அப்படிப்பட்ட நாளில் யாரும் எதுவும் செய்யக்கூடாது என்பது யூதர்களின் நம்பிக்கையாய் இருந்ததால், அத்தகைய நாளில் ஏசு மக்களைக் குணப்படுத்தியதை கடவுளுக்குச் சவால்விடும் குற்றமாகக் கருதினார்கள்.)

தவிர, 'தம்மைக் கடவுளின் திருக்குமாரன் என்று கூறிக்கொள்கிறார். இவையெல்லாம் வெறுக்கத்தக்கவை' என்று கூறினார்கள். இது பற்றி மேலிடங்களுக்கு எடுத்துக் கூறினார்கள். குறிப்பாக ரோமன் அதிகாரிகளுக்கு இதுபற்றி செய்திகளைப் பறக்கவிட்டார்கள்.

ஏசு கிறிஸ்து தனது சீடர்களுடன் கலீலிக்குச் செல்லும் வழியில் ஜெரூசலத்திலுள்ள ஆலயங்களில் உபதேசம் செய்யத் தொடங்கினார். அங்கே இருந்த நாணயமற்ற தரகர்களைத் துரத்தினார். இது அங்கே இருந்த பூசாரிகளுக்கு ஆத்திரத்தைக் கொடுத்தது. இது ஏசுவின் வாழ்வில் முக்கிய நாளாக மாறியது.

அந்த முக்கிய தினத்தில்தான் ஏசு கிறிஸ்து வாழ்க்கையில் முக்கியமான இடம்பெற்ற சம்பவம்... Last Supper என்று பைபிளில் விசேஷமாகக் குறிப்பிடப்படும் தமது 12 சீடர்களுடன் கடைசியாக உணவு அருந்தினார். பிறகு மேலே யாத்திரை செய்யத் தொடங்கும் முன் அவர் கைது செய்யப் பட்டார். ஜூடாஸ் என்பவன்தான் காட்டிக் கொடுத்தான். ஜூடாஸ் என்பவன் ஏசுவின் 12 சீடர்களில் ஒருவன்.

ஏசு கிறிஸ்துவை உடனே பிடித்து யூத சபை கமிட்டிக்குக் கொண்டு வந்தார்கள். கமிட்டிக்காரர்கள், நியாயத்தை விசாரிப்பது போல் விசாரித்து விட்டு, ஏசு எல்லாவித ஏமாற்றுகளையும் செய்தவர் என்று கூறி, அவருக்கு மரண தண்டனை விதித்தார்.

யூதக் கூட்டத்தினர் ஏசு கிறிஸ்துவை சிலுவையிலிட்டு அறைய வேண்டும் என்று தீர்மானித்தார்கள். அந்த நாளில் தண்டனை முறைகளில் இதுவும் ஒன்று. ஏசு கிறிஸ்துவின் தலையில் முட்களாலான ஒரு கிரீடத்தை வைத்தார்கள். அவருக்கு சிவப்பு நிறத்தில் ஒரு அங்கி அணிவித்தார்கள். அவரை கோல்கொதா என்ற இடத்திற்குக் கொண்டு சென்றார்கள். அங்கேதான் அவர் சிலுவையில் அறையப்பட்டார்.

ஏசு கிறிஸ்து இறந்த பிறகு, அவரை சிலுவையிலிருந்து இறக்கி கல்லறையில் வைத்தார்கள்.

மூன்று நாட்களுக்குப் பிறகு சில பெண்கள் ஏசு கிறிஸ்துவின் இறந்த சடலத்துக்கு வாசனைத் திரவியங்கள் பூசி, பாடம் செய்ய விரும்பினார்கள். ஆனால் கல்லறையைத் திறந்தபோது அது காலியாக இருந்தது.

அங்கே பாதுகாப்பிற்காக இருந்த ஒரு தேவதை, "ஏசு கிறிஸ்து மரணத்திலிருந்து எழுந்து வந்தார்" என்று அந்தப் பெண்ணிடம் கூறியது.

ஏசு உயிர் துறந்ததும் முதல் முதலாக மேரி மெகதலினுக்குக் காட்சி தந்தார். அவள் ஒரு தாசியாக வாழ்ந்தவள். எனினும், அவள் ஏசு கிறிஸ்துவை முழுவதுமாக ஏற்றுக்கொண்டதால் அவளுக்கு ஏசு இந்த மதிப்பைக் கொடுத்தார்.

ஏசு கிறிஸ்து உயிர் துறந்து 40 நாட்கள் பூமியில் வாழ்ந்தார். பிறகு அவர் சொர்க்கத்திற்குத் திரும்பி விட்டார்.

அவர் மரணத்திலிருந்து உயிர்த்து எழுந்ததுதான் கிறிஸ்துவ மதத்தின் முக்கிய அங்கமாகக் கருதப்பட்டது. ஏசு கிறிஸ்துவை கடவுளின் மறு அவதாரமாகவே கிறிஸ்துவர்கள் இரண்டாயிரம் ஆண்டுகளாக நம்புகின்றனர்.

'மனிதர்களுக்குள் சமத்துவம் அவசியம். பணக்காரர்கள் ஏழைகளுடன் தங்கள் செல்வத்தைப் பங்கிட்டுக் கொள்ளவேண்டும்' என்று அவர் உபதேசித்தார். அவர், சமூகத்தினர் யாரை ஒதுக்கினார்களோ, அவர்களுடன் வெளிப்படையாகவே கலந்து பழகினார்.

'மனிதர்கள் எல்லாரும் கடவுளின் குழந்தைகள். எல்லாரையும் காப்பாற்றவே கடவுள் ஆவலுடன் இருக்கிறார். ஒவ்வொருவரும் கதி மோட்சமடைய அவர் உதவியை எதிர்பார்த்து இருப்பவர்களே.'

இந்த உண்மையை உலகினருக்கு உபதேசிக்கவே அவர் அவ்வாறு வாழ்ந்து காட்டினார். அவருடைய சன்மார்க்க போதனைகளில் இதுவே மத சம்பந்தமான அடிப்படை தத்துவம் ஆகும்.

'பரமண்டலத்திலுள்ள தந்தையாரின் குழந்தைகள் நாமெல்லாரும்' என்று வற்புறுத்துவார்.

பூசாரி வர்க்கத்தினரை அவர் மிகக் கொடிய பாம்புகளுக்கு இணையாக ஒப்பிட்டிருக்கிறார்.

தவறு இழைக்கப்படுவதைப் பார்த்துக்கொண்டு, அவர் வாளா விருந்ததில்லை. 'ஒரு கன்னத்தில் அடித்தவனுக்கு மற்றொரு கன்னத்தைக் காட்டு' என்று அவர் குறிப்பிட்டிருக்கிறார். ஆனால் எதிர்க்க முடியாது என்ற கோழைத்தனத்தைக் காட்டுவதற்காக அல்ல அந்த வார்த்தைகள்.

அடிக்கு அடி கொடுக்க வேண்டும் என்ற வன்மை மனப்பான்மைக்கு இடம் கொடுக்காமல், மனதைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பதே ஏசுவின் நோக்கம். அவர் பேசும் கூட்டத்திலிருந்த சில யூதர்கள், 'ஸீஸருக்கு நாங்கள் மரியாதை செலுத்த வேண்டுமா? வேண்டாமா?' என்று கேட்டார்கள்.

ஏசுநாதரிடமிருந்து உடனே பதில் வந்தது. 'ஸீஸருக்கு உரித்தானவற்றை அவருக்கு அளியுங்கள்; கடவுளுக்கு உரித்தானவற்றை அவருக்கு அளியுங்கள்!' என்றார்.

'கடவுள் ராஜ்ஜியம் ஏற்படும்போது எல்லா அநீதிகளும் ஒழிக்கப்பட்டு விடும்' என்பது ஏசுநாதரின் அசைக்க முடியாத நம்பிக்கையாகும் கடவுள், ராஜ்ஜியத்தை ஸ்தாபிக்க வேண்டும் என்று சொல்கிறபோது, அவர் இந்த பூமண்டல வாழ்க்கையின் உண்மை நிலையைப் புறக்கணித்து விடவில்லை.

ஏசுநாதர் மீது எப்படியாவது- ஏதாவது குற்றச்சாட்டைக் கொண்டுவர வேண்டும் என்று யூதர்கள் எதிர்பார்த்தார்கள்! 'கடவுளின் மகன் என்று சொல்லிக் கொண்டு மக்கள் மனதைக் கெடுக்கிறார்' என்ற குற்றச்சாட்டை அவர்மீது சுமத்தினர்.

ரோமன் கவர்னர் பைலேட், ஏசுநாதரிடம் எவ்வித குற்றத்தையும் தன்னால் காண முடியவில்லை என்று தன் தீர்ப்பில் கூறினார். இருந்தும் மக்களின் ஆத்திரம், ஆவேசம் ஆகியவற்றைப் பார்த்து ஏசுநாதரை யூதர்களிடம் ஒப்படைத்து விட்டார்.

ஏசு சிலுவையில் அறையப்பட்டபோது, அவருடன் இரண்டு குற்றவாளிகளும் அறையப்பட்டார்கள்.

ஒரு குற்றவாளி ஏசுநாதரைப் பார்த்து ஏளனமாகச் சிரித்தான் என்றும்; மற்றவன், 'நீங்கள் வெற்றியுடன் மீளும்போது என்னை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள்' என்று கூறினான் என்றும் குறிக்கப்பட்டுள்ளது.

தன்னை சித்ரவதை செய்தவர்களிடமும் தன்னைப் பார்த்து ஏளனமாகப் பேசியவர்களிடமும் எவ்வித துவேஷத்தையோ, வெறுப்பையோ காட்டாமல் தன்னிடம் பேசிய குற்றவாளியைப் பார்த்து, 'கடவுளின் கிருபை கிடைக்கும்' என்றாராம் ஏசுநாதர்.

அவர் பிறப்பு தெய்வாம்சம் பொருந்தி இருந்தது. அவர் முடிவும் தெய்வாம்சமாகவே இருந்தது. மனிதர்களை கடவுள் மீது ஈடுபடுத்த அவர் வந்தார். அவர் கடைசியாகச் செய்ததும் அந்த வேலையைத் தான். குற்றவாளிக்கும் கடவுளின் கருணை உண்டு என்பதை அவர் வெளியிட்டார்.

## ஏசுவின் உபதேசங்கள்

"நீங்கள் பூமிக்கு உப்பாக இருக்கிறீர்கள்; உப்பானது சாரமற்றுப்

போனால் எதனால் சாரமாக்கப்படும்? வெளியே கொட்டப்படுவதற்கும் மனிதரால் மிதிக்கப்படுவதற்குமே ஒழிய வேறு எதற்கும் உதவாது.

விளக்கைக் கொளுத்தி மரக்காலால் மூடி வைக்காமல், விளக்குத் தண்டின்மேல் வைப்பார்கள். அப்பொழுது அது வீட்டிலுள்ள யாவருக்கும் வெளிச்சம் கொடுக்கும்.

வானமும், பூமியும் ஒழிந்து போனாலும், நியாயம் உறுதியாக உள்ளது. எல்லாம் நிறைவேறும் அளவும் அதில் ஒரு சிறு எழுத்தாகிலும், ஒரு எழுத்தின் உறுப்பாகிலும் ஒழிந்து போகாது என்று உண்மையாக உங்களுக்குச் சொல்லுகிறேன்.

தீமையை எதிர்த்து நிற்க வேண்டாம்; உன்னை ஒருவன் வலது கன்னத்தில் அறைந்தால், அவனுக்கு மறு கன்னத்தையும் திருப்பிக் காட்டு. உன்னோடு வழக்காடி உன் துணியை எடுத்துக்கொள்ள வேண் டும் என்று இருக்கிறவனுக்கு உன் அங்கியையும் விட்டுவிடு.

ஒருவன் உன்னை ஒரு மைல் தூரம் வரவேண்டி பலவந்தம் செய்தால் அவனோடு இரண்டு மைல் தூரம் போ.

உன்னிடத்தில் கேட்கிறவனுக்குக் கொடு. உன்னிடத்தில் கடன் வாங்க விரும்புகிறவனிடம் முகம் கோணாதே.

உங்கள் சத்ருக்களைச் சிநேகியுங்கள்; உங்களைச் சபிக்கிறவர்களை ஆசீர்வதியுங்கள்; உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள்; உங்களை நிந்திக்கிறவர்களுக்காகவும் ஜபம் செய்யுங்கள்.

மற்றவர்கள் காண வேண்டுமென்று உங்கள் தர்மத்தைச் செய்யாதீர்கள். தர்மம் செய்யும்போது உன் தர்மம் அந்தரங்கமாய் இருப்பதற்கு உனது வலது கை செய்கிறதை இடது கை அறியாதிருக்க வேண்டும்.

நீயோ ஜபம் செய்யும்போது ஏமாற்றுக்காரரைப் போலிருக்க வேண்டாம். மனிதன் காணும்படியாக அவர்கள் ஜப ஆலயங்களிலும் வீதிகளின் சந்துகளிலும் நின்று ஜபம் செய்ய விரும்புகிறார்கள். நீயோ ஜபம் செய்யும்போது, உன் அறைக்குள் நுழைந்து கதவைப் பூட்டி அந்தரங்கத்திலிருந்து உன் பிதாவை நோக்கி ஜபம் செய்.

பூமியிலே நீங்கள் பொக்கிஷங்களைச் சேர்த்து வைக்கவேண்டாம்; இங்கே பூச்சியும் புழுவும் அவற்றைக் கெடுக்கும். இங்கே திருடரும் குறி வைத்துத் திருடுவார்கள். பரலோகத்தில் உங்களது பொக்கிஷங்களைச் சேர்த்து வையுங்கள்.

இரண்டு எஜமான்களுக்கு ஊழியம் செய்ய எவனாலும் முடியாது. ஒருவனைப் பகைத்து மற்றவனைச் சிநேகிப்பான்; அல்லது ஒருவனைப் பற்றிக்கொண்டு மற்றவனை அசட்டை செய்வான். தேவனுக்கும் உங்கள் உலக ஆசைப்பொருளுக்கும் ஒரே சமயத்தில் ஊழியம் செய்ய உங்களால் முடியாது.

கண்ணானது சரீரத்தின் விளக்காக இருக்கிறது; உன் கண் தெளிவாக இருந்தால் உன் சரீரம் முழுவதும் வெளிச்சமாக இருக்கும். உன் கண் கெட்டதாய் இருந்தால், உன் சரீரம் முழுவதும் இருளாயிருக்கும். இப்படி உன்னிலுள்ள வெளிச்சம் இருளாயிருந்தால் அந்த இருள் எவ்வளவு அதிகமாயிருக்கும்!

ஆகாயத்துப் பட்சிகளைக் கவனித்துப் பாருங்கள். அவை விதைக்கிறதுமில்லை; அறுக்கிறதுமில்லை; களஞ்சியங்களில் சேர்த்து வைக்கிறதுமில்லை. அவற்றையும் உங்கள் பரமபிதா காப்பாற்றுகிறார். அவற்றைப் பார்க்கிலும் நீங்கள் மேல் அல்லவா?

கவலைப்படுகிறதனாலே, உங்களில் எவன் தன் சரீர அளவோடு ஒரு முழத்தைக் கூட்டுவான்?

நீங்கள் குற்றவாளிகள் என்று தீர்க்கப்படாதபடிக்கு மற்றவர்களைக் குற்றவாளிகள் என்று முடிவு கட்டாதீர்கள்.

ஏனெனில், நீங்கள் மற்றவர்களைத் தீர்க்கிற தீர்ப்பின்படியே நீங்களும் தீர்க்கப்படுவீர்கள்; மற்றவர்களுக்கான அளவின்படியே உங்களுக்கும் அளக்கப்படும்.

நீ உன் கண்ணிலிருக்கிற உத்திரத்தை உணராமல் உன் சகோதரன் கண்ணிலிருக்கிற துரும்பைப் பார்க்கிறதென்ன?

கேளுங்கள், அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும். தேடுங்கள் அப்பொழுது கண்டடைவீர்கள். தட்டுங்கள் அப்பொழுது உங்களுக்குத் திறக்கப்படும்.

நல்ல மரம் கெட்ட கனிகளைக் கொடுக்க முடியாது. கெட்ட மரம் நல்ல கனிகளைக் கொடுக்க முடியாது. நல்ல கனிகளைக் கொடுக்காத மரமெல்லாம் வெட்டுண்டு, தீயிலே போடப்படும்.

பரிசுத்தமானதை நாய்களுக்குப் போடாதீர்கள். உங்கள் முத்துகளைப் பன்றிகள் மேல் போடாதீர்கள். போட்டால் தங்கள் கால்களால் அவற்றை மிதித்து, திரும்பிக்கொண்டு உங்களைப் பீறிவிடும்.

இரக்கம் உள்ளவர்கள் பாக்யவான்கள்; அவர்கள் இரக்கம் பெறுவார்கள். இதயத்தில் சுத்தம் உள்ளவர்கள் பாக்யவான்கள்; அவர்கள் தேவனைத் தரிசிப்பார்கள். சமாதானம் செய்கிறவர்கள் பாக்ய வான்கள்; அவர்கள் தேவனுடைய புத்திரர் எனப்படுவார்கள். நீதியால் துன்பப்படுகிறவர்கள் பாக்யவான்கள்; ப்ரலோக ராஜ்ஜியம் அவர்களுடையது.

ஒரு பெண்ணை இச்சையோடு பார்க்கிற எவனும் தன் இதயத்தில் அவளோடு விபசாரம் செய்தது போலாகும். உன் வலதுகண் உனக்குத் துன்பம் உண்டாக்கினால் அதைப் பிடுங்கி எறிந்து போடு; உன் சரீரம் முழுவதும் நரகத்தில் தள்ளப்படுவதைப் பார்க்கிலும் உன் அங்கங்களில் ஒன்று கெட்டுப்போவது உனக்கு நலமாக இருக்கும்."

## சிலுவை

மரக்கட்டைகள் இரண்டை ஒன்றுக்கொன்று குறுக்காக வைத்து அமைத்த சிலுவை சின்னத்திற்கு மிகப் பழமையான வரலாறு உண்டு. இதற்கு கிராஸ் (Cross) என்று ஆங்கிலத்தில் பெயர். கிரிமினல் கைதிகளை சாகும்வரை கட்டிப்போட்டு வைப்பதற்கு உபயோகித்த தூணுக்கு லத்தீனில் க்ருக்ஸ் (Crux) என்று பெயர்.

குற்றவாளிகளை சிலுவையில் வைத்து ஆணி அடிப்பதை மரண தண்டனையாக முன்காலத்தில் பல நாடுகள் கையாண்டதுண்டு. ரோமாபுரி மன்னன் கான்ஸ்டன்டைன்தான் இச்சிலுவைத் தண்டனையை நிறுவியவர். ஏசுநாதர் இந்தச் சிலுவையில் அறையப்பட்டே உயிர்விட்டார்.

**பைபிள்:** பைபிளின் பல பகுதிகள் 1136 மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. (விவிலிய நூல்) ஆங்கில மொழியில் மிகவும் பழமை வாய்ந்த புத்தகம். உலகிலேயே மிக அதிகமாக விற்பனையான நூல் இதுதான்.

உலக ஜனத்தொகையில் மிக அதிகமானவர்கள் கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவர்கள்தான்!





# 6

# கன்பூஷியஸிஸம்

சீனாவில் மூன்று முக்கிய மதங்கள் மக்களால் பின்பற்றப்பட்டன. ஒன்று கன்பூஷியஸிஸம், இரண்டு டாவோயிஸம், மூன்று பௌத்த மதம்.

கன்பூஷியஸ் சிறந்த பேரறிவாளர். அவரது போதனைகளே அவர் பெயரால் கன்பூஷியஸிஸமாக மலர்ந்தது. இதன் லட்சியம் மக்களுக்கு நீதியையும் தர்மத்தையும் போதிப்பதே! அவை மக்கள் மனங் கவர்ந்தவையாக இருந்தமையால் பின்னால் அவரையே தெய்வமாக வழிபடத் தொடங்கினார்கள்.

கி.மு. 551-ல் கன்பூஷியஸ் என்கிற குங்புத்ஸன் பிறந்தார். 'குங் புட்ஸே குங்' என்பது அவர் பெயரின் அடைமொழி. அரசியல் தத்துவ உலகத்தின் ஞானி குங் என்புதே இந்த அடைமொழியின் அர்த்தம்.

அவர் மூன்று வயதாக இருக்கும்போது, அவரது தந்தை ஷலியாங் தமது 70-ஆவது வயதில் இறந்தார்.

தாயார்தான் அவரைப் பேணி வளர்த்தார்.

"நேர்மையையும் நீதியையும் மட்டுமே நீ நண்பர்களாகக் கொள்ள

வேண்டும்" என்று தாய் அவருக்குப் போதித்து வந்தாள்.

அவர் சிறு வயதிலேயே சரித்திரம், செய்யுள், தத்துவம், சங்கீதம் ஆகியவற்றைப் படித்தார். சங்கீதத்தின்மீது பிரியம் அதிகம். பதினேழாவது வயதில் தமது கல்வியைப் பூர்த்தி செய்தார். ஒரு தனியார் கிடங்கில் கணக்கு எழுதும் வேலையில் சேர்ந்தார்.

தமது ஓய்வு நேரத்தில் படிப்பதில் கவனம் செலுத்தினார். தமது விளையாட்டுத் தோழர்களுக்குத் தாமே கல்வி கற்றுக் கொடுத்தார். பின்னால் இந்தத் தோழர்களே அவரது அத்யந்த சீடர்களாக மாறினார்கள்.

பத்தொன்பதாவது வயதில் அவர் திருமணம் செய்து கொண்டார். ஒரு பிள்ளையும் இரண்டு பெண்களும் அவருக்குப் பிறந்தார்கள். மூன்றாவது ஆண்டு அவர் தமது மனைவியை விவாகரத்து செய்தார்.

இருபத்திரண்டாவது வயதில் அவர் ஒரு ஆசிரியராக வேலையைத் தொடங்கினார். தமது இல்லத்தையே ப்ள்ளித் தலமாக வைத்துக் கொண்டார். சரித்திரம், செய்யுள், வாழ்க்கை நியதி இந்த மூன்று துறைகளில் அவர் கல்வி புகட்டினார்.

முதலில் சிறு பிள்ளைகளே அவரிடம் சேர்ந்தார்கள். ஆனால் குங்கின் அன்பு இதயமும், சொல்லும் முறையும் நிறைய மாணவர்களைக் கவர்ந்தன.

இளவயதிலேயே குங் அரசியல் மேதையாக விளங்கினார். அந்தக் காலத்தில் இந்தியாவைப்போல சீனாவையும் பல சிற்றரசர்கள் ஆண்டார்கள். உல்லாச வாழ்க்கையிலும் கேளிக்கைகளிலும் அவர்கள் மூழ்கிக் கிடந்தனர். நாட்டில் கொலை, கொள்ளைகள் மிகச் சாதாரணமாகி விட்டன. மக்கள்படும் கஷ்டம் சகிக்க முடியாத அளவுக்குப் போய்க் கொண்டிருந்தது.

'குங்புத்ஸன் நெஞ்சம் பொருமியது. ஒவ்வொரு அரசரிடமும் குங் நேரில் சென்றார். அவர்களது போக்கைக் கண்டித்தார். அரசனின் கடமை, அரசின் இலக்கணம், நிர்வாக முறை ஆகியவற்றை விளக்கினார். இந்தத் துணிச்சல் மிக்க வேலையை அவர் மேற்கொண்டபோது அவருக்கு வயது 25 தான்.

அவர் செய்த உபதேசங்கள் அரசர்களுக்குப் பிடிக்கவில்லை. இதனால் குங்குக்கு எப்போதும் ஆபத்து இருந்து கொண்டே இருந்தது.

அவர் சொல்வதைக் கேட்டு, எங்கே அரசர்கள் திருந்திவிடப் போகிறார்களோ என்ற பயம் சில சுயநலவாதிகளுக்குத் தோன்றியது. அவர்கள் குங்மீது வீண்பழிகளைச் சுமத்திக் கொண்டே இருந்தார்கள்.

ஆனால் எதற்கும் அஞ்சாது, சீனா முழுதும் சுற்றி கன்பூஷியஸ் என்னும் குங் தன் உபதேசங்களைச் செய்தார். சீனா எங்கும் அவருக்கு ஏராளமாக சீடர்கள் ஏற்பட்டார்கள்.

சிற்றரசர்களில் ஒருவரது மனைவி நான்ஷியா என்பவள்! தேசம் போற்றும் அழகி. நாட்டு மக்களுக்கு அரசனிடம் நம்பிக்கை குறைந்து வந்ததை அந்தச் சிற்றரசர் அறிந்தார். இந்தச் சமயத்தில் தற்செயலாக அரசனின் அரண்மனைக்கு விருந்தாளியாக குங் வந்திருந்தார். அவரது நட்பைப் பயன்படுத்திக்கொள்ள அரசர் ஒரு திட்டம் வகுத்தார்.

ஒருநாள் ராணி நான்ஷியாவையும் கன்பூஷியஸ்ஸையும் தன்னோடு அமர்த்திக் கொண்டு அரசர் ராஜ வீதிகளில் பவனி வந்தார். தனக்கும் தத்துவ ஞானி கன்பூஷியஸுக்கும் நெருங்கிய சினேகம் உள்ளது என்பதைக் காட்டி மக்களின் மதிப்பை மீண்டும் பெறுவதே அவர் நோக்கம்.

அந்த பவனி ராஜவீதிகளில் சென்றது. நகரமே திரண்டு வந்து அந்தக் கோலாகலக் காட்சியைக் கண்டு ரசித்தது. ஆனால் கன்பூஷியஸ்ஸுக்கு அந்தக் காட்சி வேறு ஒரு உண்மையை எடுத்துக் காட்டியது.

'அழகிய பெண்கள் ஜனக்கூட்டத்தை வசீகரிப்பதுபோல சிறந்த அறிவாளிகள் ஒருபோதும் வசீகரிப்பது இல்லை. இது ஒரு அவமானச் செய்கை' என்று தன் கருத்தைத் தெரிவித்தார். பிறகு விரக்தியில் அந்த ராஜ்யத்திலிருந்தே சென்று விட்டார்.

"நான் பதினைந்தாவது வயதில் கல்வி கற்பதில் தீவிரமாகக் கவனம் செலுத்தினேன். முப்பதாவது வயதில் எனது பழக்க- வழக்கங்களை நிர்ணயம் செய்து கொண்டேன்.

நாற்பதாவது வயதில் மனக்குழப்பங்கள் யாவும் மறைந்தன. ஐம்பதில் எல்லாம் கடவுள் சித்தம் என்பது எனக்குப் புலனாயிற்று.

அறுபதைக் கடந்ததும் எல்லாச் சலனங்களும் என்னை விட்டு மறைந்தன. எழுபதாவது வயதில் இயற்கை விதிகளை மீறாத வகையில் எனது மன எண்ணங்களை எந்தத் திசையிலும் செலுத்தி அவற்றை நிறைவேற்றிவிட முடிந்தது" என்றார் குங்.

இறைவன் உண்டு என்பதை அவர் ஒப்புக்கொண்டார். அதை அவர் மறுக்கவே இல்லை. ஆனால் சமூகநலன்களைச் செய்வதன் மூலமே இறைவனை அடையலாம் என்பது அவரது கருத்து. மக்கள் எல்லாரும் ஆன்மிக வாழ்க்கையே நடத்த வேண்டும் என்று கூறினார். அவரது அறிவையும், செல்வாக்கையும் அறிந்து சீன நாட்டிலுள்ள லூ என்ற ராஜ்யத்தின் பிரதம மந்திரி பதவி அவருக்கு அளிக்கப்பட்டது.

அவருடைய சிறந்த நிர்வாகத்தில் லூ ராஜ்யம் பிற ராஜ்யங்களுக்கு ஒரு வழிகாட்டியாக அமைந்தது. பிற்காலத்தில் சுமார் 2000 ஆண்டுகளுக்குப் பின் உலக நாடுகள் என்னென்ன சீர்திருத்தங்களைச் செய்ய முற்பட்டனவோ அவற்றை எல்லாம் தீர்க்கதரிசிபோல முன்னுணர்ந்து அவர் செய்ய ஆரம்பித்தார். ஏழை- பணக்காரன் என்ற வித்தியாசத்தை அழிப்பதிலே அவர் கண்ணும் கருத்துமாக இருந்தார்.

ஆனால் அவர் கொண்டு வந்த சீர்திருத்தங்களைப் பணக்காரர்கள் விரும்புவார்களா? ஆகவே அவர்கள் கன்பூஷியஸ்ஸுக்கு விரோதமாக சூழ்ச்சி செய்தார்கள். அதனால் அவரது உத்தியோகம் பறிபோயிற்று. ஆயினும் அவர் கவலைப்படவில்லை. விடாப்பிடியாக நல்லதை எடுத்துச் சொல்வதையே தன் வாழ்வின் முக்கிய லட்சியமாகக் கொண்டிருந்தார்.

எல்லா மகான்களைப்போல் இவரை அவர் காலத்தில் யாரும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. ஒரு மகான் இறந்த பிறகுதான் அவரது புகழ் பீறி எழும். அவ்வண்ணமே அவர் மறைந்த பிறகு பிற்காலத்தில் அவருடைய உபதேசங்கள்தான் சீன சமுதாய வாழ்க்கைக்கு அஸ்திவாரமாக அமைந்தன. இவர் மனித சுபாவங்களை அறிந்ததுபோல யாரும் அறியவில்லை என்றே சொல்லலாம். மனித வாழ்க்கை பண்பட்டு நடைபெற அவர் வெளியிட்ட யோசனைகளே அவருடைய சிறந்த உபதேசங்களாகும்.

"ஒரு நல்ல அரசாங்கம் நடைபெற முக்கிய தேவைகள் என்ன?" என்று ஒரு சமயம் அவரிடம் கேள்வி கேட்டார்கள்.

"நிறைய உணவு, பெரிய படை, மக்களின் நம்பிக்கை இந்த மூன்றும் தேவை" என்று கூறினார் கன்பூஷியஸ்.

"இதில் அவசியமானால் எதைக் கைவிட முடியும்?" என்று கேட்டார்கள்.

"படையைத்தான்!" என்றார் கன்பூஷியஸ்.

கண்முன்வே நடமாடும் மனிதர்களுக்குத் தொண்டு செய்யாமல் காணமுடியாத கடவுளுக்கு எப்படித் தொண்டு செய்ய முடியும்? என்பதுதான் அவரது கேள்வி.

தத்துவங்கள் மட்டும் அல்ல; மனித வாழ்க்கைக்குத் தேவையான பல அம்சங்களை கன்பூஷியஸ் கூறினார். கல்வி முறை, அரசியல் முறை, சடங்குகளைச் செய்யும் முறை, கலைகளை வளர்க்கும் முறை முத்லிய பலவற்றைப் பற்றியும் அவர் உபதேசங்கள் செய்தார்.

பிற்காலத்தில் இவருடைய நூல்களைக் கற்றறிந்தவர்கள்தான் கல்விமான்கள் என்று அழைக்கப்பட்டனர். அவற்றைப் படித்துத் தேறியவர்களே அரசாங்க உத்தியோகத்துக்கு நியமிக்கப்ப்ட்டார்கள். ஒருவரைப் பார்த்து 'இவர் ஒரு பெரிய மனிதன்' என்றால், கன்பூஷியஸ் நூல்களை நன்கு படித்தவர் என்றே அர்த்தம்.

சீன சக்கரவர்த்திகள் பலர் கன்பூஷியஸ் மதத்தைச் சேர்ந்தவர்கள் என்று தங்களைப் பெருமையாகச் சொல்லிக் கொண்டனர். சீன மக்கள் கன்பூஷியஸ்ஸை தெய்வத்தின் அம்சமாகவே கருதி வழிபடவும் ஆரம்பித்தனர்.

சீனாவைப் பற்றி அதிகமாகத் தெரியாத வெளிநாட்டாருக்குக்கூட கன்பூஷியஸ் பற்றி நன்கு தெரியும். ஏனெனில் அவருடைய பெயர் அவ்வளவு உலகப் பிரசித்தியாகி விட்டது.

மிகப் பழைய சுவடிகளை எல்லாம் தேடிக் கண்டுபிடித்து அவற்றிலுள்ள நல்ல விஷயங்களைப் பல அருமையான புத்தகங்களாக சீன மக்களுக்குத் தந்தவர் கன்பூஷியஸ்.

ஐந்து புராதனமான இலக்கியங்கள் என இவை அன்ழக்கப்பட்டன. ஆறாவது புத்தகம் (Book Of Music) ஒன்று உண்டு என்று லின்யூடாங் என்கிற எழுத்து மேதை கூறுகிறார்.

முதல் புத்தகம் (Book Of Changes) கி.மு. 3000 ஆண்டுகளுக்கு முந்தைய தகவல்களைக் கொண்டது. இதில் இல்லாத விஷயங்களே இல்லை என்று கூறுவார்கள். இரண்டாவது புத்தகம் (Book Of Annuals) சீனாவின் சரித்திரம், அதனை அரசாண்டவர்கள் விவரம் எல்லாம் அடங்கியது.

மூன்றாவது (Book Of odes) புத்தகத்தில் மிகச்சிறந்த 300 கவிதைகள் அடங்கியுள்ளன. நான்காவது (Book of Ceremonies) எந்தக் காரியங்களை எப்படிச் செய்ய வேண்டும் என்ற விதிமுறைகளைக் கூறுவது.

ஐந்தாவது புத்தகம் (Spring of Autumn) கன்பூஷியஸ்ஸே எழுதியது. தன் காலம் வரை இவர் சீன சரித்திரத்தை ஒழுங்குபடுத்தி எழுதியிருக்கிறார். இவருடைய சீடர்களால் இவர் உபதேசங்கள் பற்றிப் பின்னர் ஒரு புத்தகம் எழுதப்பட்டது.

சீனாவின் சரித்திரத்தை உருவாக்கியதில் இவருக்குப் பெரும் பங்கு உண்டு. 'அனலெக்ட்ஸ்' என்ற புத்தகம் கன்பூஷியஸ்ஸின் சம்பாஷணைகள் கொண்டதாகும்.

'இந்த உலகம் நமது பிரயாணத்தில் ஒரு தங்குமிடம். நாம் திட்டமிட்டு வேலை செய்ய வேண்டும். அதை முடித்து வைப்பது இறைவன் பொறுப்பு.

பிறரைக் குறை கூறுமுன் உன்னிடமுள்ள குறையைக் கவனி. 20 ஆண்டுகள் நாம் நல்லது செய்து எடுக்கும் நல்ல பெயரை ஒருநாள் செய்யும் கெடுதல் கெடுத்துவிடும்.'

இவை அவ்வுடைய மணிவாசகங்களில் சில.

கன்பூஷியஸ்ஸை எதிர்த்து பலர் நடவடிக்கை எடுத்தபோது வைத்தியம், விஞ்ஞானம், ஜோதிடம் பற்றிய புத்தகங்களைத் தவிர மற்றவை தீக்கிரையாக்கப்பட்டன.

அவருடைய சிஷ்யர்கள் எரிந்து போன புத்தகங்களிலுள்ள பல விஷயங்களை மனப்பாடம் செய்திருந்ததால் அவர்கள் அவற்றை மறுபடியும் புத்தகங்களாக வெளியிட்டார்கள். சீனர்களின் சிந்தனையின் பிதா என்று கன்பூஷியஸ் போற்றப்பட்டார்.

'கன்பூஷியஸ்ஸிடம் உள்ள முக்கிய குணங்கள் எங்களை வசீகரித்தன. அவர் எந்த விஷயத்திலும் இதுதான் முடிவு என்று பிடிவாதம் பிடித்ததில்லை. தான் என்ற அகந்தையே அவருக்குக் கிடையாது.' என்று அவரைப் பற்றி அவர் சீடர்கள் எழுதியுள்ளனர்.

"நான் புதிதாக எதையும் கண்டுபிடிக்கவில்லை. ஆனால் நான் அறிந்ததைக் கூறுபவன்" என்றார் அவர்.

கன்பூஷியஸ் ஒரு உலக ஞானி!

⌘⌘⌘

பஹாவுல்லா



# 7

# பஹாயிஸம்

**1844**-ஆம் ஆண்டு மே 23-ஆம் தேதி பாரசீகத்தில் ஷிராஜ் என்னும் ஊரில் பாப் என்கிற ஒரு இளைஞன் திடீரென்று எல்லாரிடமும் பரபரப்பாகப் பேச ஆரம்பித்தான்.

"கடவுளின் தூதன் சீக்கிரம் நம்மிடையே வரப் போகிறார். இதைக் கடவுள் சார்பில் நானே உங்களுக்குக் கூறுகிறேன்" என்றான்.

எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள்! பலர் அவனை நம்பினார்கள்.

"வரப்போகிற கடவுளின் தூதனை வரவேற்க மனித இனத்தைத் தயார் செய்யவே வந்திருக்கிறேன்" என்று கூறினான்.

அவன் இவ்விதம் பிரசாரம் செய்ய, ஊரில் உள்ள முகம்மதிய குருக்கள் அவனுக்கு எதிராகப் போர்க்கொடி எழுப்பினார்கள். அதனால் ஆட்சியாளர்கள் 'பாப்'பைக் கைது செய்து சிறைச் சாலையில் அடைத்து சித்திரவதை செய்தார்கள்.

1850-ஆம் ஆண்டு 9-ஆம் தேதி ஜூலை அன்று 'தப்ரிஸ்' நாட்டில் ஒரு பெரிய பொதுமைதானத்தில் எல்லாரும் பார்க்கும்படியாக

அவனை சிரச்சேதம் செய்தார்கள். இதன் பிறகு பாபின் 20,000 அபிமானிகளும் கொல்லப்பட்டார்கள்.

இன்று இஸ்ரேலில் உள்ள ஹைஃபா வளைகுடாவில் தங்கக் கோபுரம் அமைந்த பெரிய மாளிகை ஒன்று மிக அழகாகத் தென்படுகிறது. அதுதான் பாப்பின் சடலம் புதைக்கப்பட்ட இடத்தில் எழுப்பப்பட்டுள்ள புனித ஆலயமாகும்.

சரி; பாப் சொன்ன கடவுளின் தூதர் பின்னர் வந்தாரா?

வந்தார்! ஆமாம்! அவர் ஏற்கெனவே அவதாரம் எடுத்திருந்தார். பாரசீகத்தில் 1817-ஆம் ஆண்டு ஒரு வசதியான குடும்பத்தில் பஹாவுல்லா என்பவர் பிறந்தார். அவரது தகப்பனார் அரசாங்க அமைச்சராக இருந்தார்.

பஹாவுல்லா சிறு வயதிலேயே கூரிய அறிவைப் பெற்றிருந்தார். ஏழைகளிடம் கருணைகொண்டு பல உதவிகள் செய்தார். சமுதாய அக்கறை மிகுந்திருந்தாலும் அரசியல் ஆர்வம் அவருக்கில்லை. எனவே தன் தந்தையின் வழியை அவர் பின்பற்றவில்லை. தேடிவந்த அரசுப் பதவியையும் நிராகரித்தார்.

தனது 27-ஆவது வயதில்- 1844-ல் பாப் என்று மேலே குறிப்பிட்ட மகானுக்குச் சீடரானார். பாப் கொல்லப்பட்ட பிறகு அவரது சீடர்கள் பெருந்துன்பங்களுக்கு ஆளானார்கள்.

1855-ல் பஹாவுல்லா டெஹ்ரான் சிறையில் அடைக்கப்பட்டார்.

அவர் சிறையில் இருந்தாலும், அங்கே இருந்துகொண்டே அரசர்களுக்குத் தைரியமாக கடிதங்கள் எழுதினார். அதில் தனது வாழ்க்கையின் லட்சியம் என்பது என்ன என்று கூறி தர்மத்தையும், அமைதியையும்தான் நான் ஏற்படுத்த விரும்புகிறேன் என்று கூறினார். பஹாவுல்லா தமது எதிரிகளைப் பற்றி எதுவும் சொல்லவில்லை; அவர்களை எதிர்க்கவுமில்லை.

அவர் தம்மைப் பற்றி கூறினார்: "கடவுளின் தர்மத்தால் கூறுகிறேன். நான் யாருடைய ராஜ்யங்களிலும் கை வைக்க விரும்பவில்லை. எந்த ராஜ்யத்தை வெல்வதற்கும் வரவில்லை. ஆனால் என் குறிக்கோள் மனிதனின் மனங்களைப் பற்றிக் கொள்வதே. கருணை பற்றியும் அருளைப் பற்றியும் யாரெல்லாம் பேசிப் பின்பற்றுகிறார்களோ அவர்கள் உலகத்தைத் துறந்தவர்களாவார்கள். அவர்களால் இந்த

உலகத்தில் உள்ள எல்லா சோகங்களும் தானாக அகலும்."

பஹாவுல்லாவுக்குப்பின் 1892-லிருந்து 1921- வரை அப்துல் பஹாா என்பவர் பஹாயின் சமுதாயத்தை நடத்தி வந்தார். அப்துல் பஹாவுக்குப் பின்னால் அவரது பேரன் ஷோகி எஃபன்டி வழிநடத்தினார். அவர் ஆக்ஸ்போர்ட் பல்கலைக் கழகத்தில் படித்தவர். அவர் பாரசீக, அரபிய மொழிகளில் பஹாவுல்லா கூறிய அருள்வாக்குகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார். அவர்தான் பஹாய்க்கு ஒரு நடைமுறையை ஏற்படுத்திக் கொடுத்தார்.

## பஹாவுல்லாவின் அருள்வாக்கு!

உலக நாடுகளில் ஏன் சச்சரவுகளும் சண்டைகளும் நிலவுகின்றன? மத குருக்களும் ஆசிரியர்களும் நிறைய தவறுகளோடு பிரசாரம் செய்கிறார்கள். அதுவே முக்கிய காரணம்!

தங்கள் மதம் ஒன்றேதான் ஆண்டவனின் மதம் என்றும்; மற்றவை எல்லாம் ஏமாற்று மதங்கள் என்றும் தங்கள் அபிமானிகளிடம் கூறி நம்ப வைக்கிறார்கள். தங்கள் கடவுளை மிகக் காருண்யமூர்த்தி என்றும்; அவருக்கு எதிராகச் செல்பவர்கள் கடவுளால் சபிக்கப்படுவார்கள் என்றும் கூறுகிறார்கள். இதனால்தான் மனித இனங்களுக்கிடையே வேற்றுமையும் விரோதங்களும் தோன்றி பெரிய பெரிய சண்டைகளில் தள்ளுகின்றன. இந்த தவறான பிரசாரங்கள் ஒழிந்துவிட்டால் எல்லா நாடுகளும் அமைதியும் ஆனந்தமும் பெறும்!

ஓ! மனித மக்களே! நாம் எல்லாரும்- ஏழை, பணக்காரர் எல்லாரும் ஒரே மண்ணிலிருந்துதான் பிறந்தோம். எதற்காக? ஒவ்வொருவரும் இன்னொருவருக்கு மேற்பட்டவனாகத் தன்னை எண்ணிக் கொள்ளக்கூடாது என்ற காரணத்திற்காக! எனவே நாம் ஒரே ஆன்மாவாக் நம்மை நினைக்க வேண்டும். ஒரே மண்ணில் நடக்கிறோம். நமது செயல்களும் நமது 'ஒரே தன்மை'யின் அடிப்படையில்தான் அமைய வேண்டும்.

ஒளியின் செல்வங்களே! இந்த உபதேசத்தை அவசியம் ஏற்றுக் கொள்ளுங்கள். உலகத்தின் எல்லா ஜனங்களும் சேர்ந்துவாழும் காலம் சீக்கிரம் வரும். அப்போது, உலக ஆளுநர்களும், அரசர்களும் ஒன்றுகூட வேண்டி இருக்கும்! ஏதாவது ஒரு தேசம் இன்னொரு தேசத்திற்கு எதிராகச் சண்டை செய்தால் உடனே எல்லாரும் சேர்ந்து அதைத் தடுக்க வேண்டும்.

இதுபோல் செய்தால், உலக நாடுகள் எதற்குமே ஆயுதங்கள் வேண்டி வராது! எங்கும் அமைதியும் பாதுகாப்பும் ஏற்படும்.

**பஹாய் மத ஆலயங்கள்!**

பஹாய் தொழுகைத் தலத்திற்கு எல்லா மதத்தினரும் வரலாம். 'டோம்' கூம்புவடிவம் கொண்ட கோபுர அமைப்பு உலக மதங்களின் ஒற்றுமைக்குச் சின்னமாக விளங்குகிறது. இங்கே வழிபாடுகள் மிக எளிமையானவை. பிரார்த்தனைகள், தியானங்கள் நடைபெறுகின்றன. பஹாய் சமயத்தின் புனிதக் கருத்துகள், உலகத்தில் எல்லா சமயங்களின் புனிதப் புத்தகங்களிலுள்ள பகுதிகள் யாவும் அவர்களாலேயே வாசிக்கப்படுகின்றன.

⌘⌘⌘

ஷிண்டோயிஸ புத்தர்



# 8

# ஷிண்டோயிஸம்

ஷிண்டோயிஸம் ஒரு ஜப்பானிய மதம். ஜப்பானில் கி.மு.4-ஆவது நூற்றாண்டின் இறுதியில் இது ஆரம்பமானது. இந்த மதத்தை யாரும் ஸ்தாபிதம் செய்யவில்லை. இந்த மதத்திற்குத் தனிக்கொள்கை என்பதும் இல்லை. அந்த மதத்தில் யாவுமே இயல்பாக உருவாகி வந்தவை.

ஷிண்டோவைச் சேர்ந்தவர்கள் 'காமி'யை வணங்குகிறார்கள். ஜப்பானில் தாமாக வளர்ந்த பல தெய்வங்களும், புராதனப் பொருட்களும், சக்கரவர்த்திகளும், பெரிய வீரம் விளைவித்தவர்களும், சித்தர்களின் ஆவிகளும் இந்த 'காமி'யில் அடங்கியவர்கள்.

ஷிண்டோ மதத்தை கோஷிட்சு, ஷூஹா, ஃபோக், ஜிஞ்ஜா என நான்கு வகையாகப் பிரித்திருக்கிறார்கள்.

### கோஷிட்சு

ஜப்பானிய சக்கரவர்த்தி செய்யும் சடங்குகளைப் பற்றியது இது. அதனால் இது சக்கரவர்த்தியின் அரண்மனையைப் பற்றிய விஷயம்.

### ஷூஹா

பழைய இனம், புதிய இனம் என 'ஷூஹா' இரண்டு வகைப்படும். ஒவ்வொரு இனத்திற்கும் ஒரு ஸ்தாபகர் உண்டு; அதற்கான கொள்கை

உண்டு. இவை இரண்டுமே ஷிண்டோயிஸத்தைச் சொல்லும் கருத்துகள் ஆகும்.

**ஃபோக்**

இது சாதாரண மக்கள் பின்பற்றும் கொள்கைகள் பற்றியது.

**ஜிஞ்ஜா**

'ஜிஞ்ஜா' என்றால் ஆலயத்தைக் குறிப்பது. ஷிண்டோவைப் பின்பற்றுபவர்கள் இந்த ஆலயங்களில் தொழுகிறார்கள். அவர்கள் ஒரே சமூகமாக இருந்துகொண்டு, ஒரே ஐக்கிய சுபாவத்துடன் வாழ்கிறார்கள். அவர்கள் தங்கள் சடங்குகளை எல்லாம் சேர்ந்தே செய்கிறார்கள். அதனால்தான் இது ஷிண்டோயிஸத்தில் முக்கிய அங்கம் வகிக்கக் கூடிய அமைப்பாக இருக்கிறது.

## ஷிண்டோவின் சரித்திரம்

'ஷிண்டோ' என்றால், 'கடவுளைப் பற்றிய வழி' என்று பொருள்! இது எட்டாவது நூற்றாண்டில் வந்த தனிப் பெயராகும்.

'யமடோ' என்ற ஒரு இனம் ஜப்பான் முழுவதையும் ஆளத் தொடங்கிய நேரம். அப்போது அரசர்கள் எல்லாருமே தெய்வப் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் என்று கூறப்பட்ட காலம். ஜப்பானில் ஷிண்டோ என்பது ஒரு அரசாங்க மதமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. அதனுடன் புத்த மதமும் சேர்ந்து இயங்க ஆரம்பித்தது.

ஜப்பானில் மதமும், அரசியலும் ஒன்றாகக் கலந்துதான் இயங்கின. ஆனால் இரண்டாவது உலக யுத்தம் முடிந்த பிறகு ஒரு மாற்றம் ஏற்பட்டது. ஜப்பானிய அரசர்கள் தங்களைத் தெய்வீகப் பரம்பரை என்று சொல்லிக் கொண்டார்கள் அல்லவா! ஜப்பானை ஜெயித்த அமெரிக்கர்கள் அந்தக் கொள்கைகளை அவர்கள் துறக்கும்படி செய்தார்கள். உலகின் பல மதங்களைப்போல ஷிண்டோவை ஸ்தாபித்தவர்கள் யாரும் இல்லை.

அதற்கு எழுதப்பட்ட பழங்காலப் புனித நூல் எதுவும் இல்லை. எட்டாவது நூற்றாண்டுக்குப்பின் எழுதப்பட்ட நூல்கள் உள்ளன. ஷிண்டோவைப் பற்றிய சட்டங்கள் எதுவுமே கிடையாது. அதன் குருக்கள் யாவருமே ஒரேவித சட்ட- திட்டங்களைப் பின்பற்றுவது இல்லை.

ஷிண்டோ நூல்கள் காமி தெய்வங்களின் சரித்திரங்களையும்,

வாழ்க்கைகளையும் கூறுகின்றன. இதில் ஒரு தெய்வத் தம்பதிகள் இருந்தார்கள். இஸானாகி நோ- மிகோடோ, இஸானாமி- நோ- மிகோடோ என்பது அந்தத் தம்பதிகளின் பெயர். இவர்கள்தான் ஜப்பானின் தீவுகளை எல்லாம் படைத்தவர்கள். இவர்களது குழந்தைகள்தான் ஜப்பானில் உள்ள பல இனங்களுக்குத் தெய்வங்களாக ஆனார்கள். 'அமடேரசு ஓமிகாமி' (சூரியக் கடவுள்) இவர்களுக்குப் பிறந்த ஒரு பெண் குழந்தை!

அவள்தான் ஜப்பானின் அரச குடும்பத்தினருக்கு 'மூதாதையராகத் தோன்றிய பெண்மணி ஆவாள். அரச குடும்பமே அவளைத் தெய்வமாக வழிபடுகிறது. 'இஸே' (ISE) என்ற தீவில் இவளது ஆலயம் இருக்கிறது. இவளது பரம்பரையினர்தான் ஜப்பான் தேசத்தை ஒன்று சேர்ந்து உருவாக்கினார்கள்.

அவளது சகோதரன் ஸூஸானோ சுவர்க்கத்திலிருந்து இறங்கி பூமி முழுதும் சுற்றினான். ஒரு கொடூரப் பாம்பை அவன்தான் கொன்றான். இதெல்லாம் பரம்பரைக் கதைகள்.

## காமி

ஷிண்டோ தெய்வம் என்பது பல தெய்வங்களுக்கான ஒரு பொதுப் பெயர். வெவ்வேறு உருவங்கள் கொண்டவர்களும்கூட 'காமி' என்ற பெயரில் அடங்கியவர்கள்தான்! இவர்களோடு சேர்த்து உணவுப் பொருட்கள், நதிகள், பாறைகள், மரங்கள் போன்றவையும் கடவுள் தன்மையோடு ஏற்கப்பட்டு விட்டன. இவை தவிர குறிப்பிட்ட பிரதேசத்திற்கும், இனத்திற்கும் தனிக் கடவுள்கள் உண்டு.

'காமி' என்பது ஷிண்டோ தெய்வங்களின் ஒரு மொத்தப் பெயர் என்று கூறினோம். தலைசிறந்த மனிதர்களும் இந்த காமியைச் சேர்ந்த கடவுளாக மாறிவிடுவார்கள். அதைத் தவிர கண்களுக்குப் புலப்படாத சக்திகளும் காமி வகையைச் சேர்ந்த கடவுள்களாக ஏற்றுக்கொள்ளப்படுவார்கள். இந்தக் கடவுள்கள் யாவருமே மிகவும் கருணை உள்ளவர்கள். ஜனங்களைப் பாதுகாக்கிறவர்கள் என்ற நம்பிக்கை ஜப்பானில் இன்னும் இருந்து வருகிறது.

## இரு மதங்கள்

ஜப்பானில் 84 சதவிகிதத்தினர் இரண்டு மதங்களைப் பின்பற்றுகிறார்கள். ஒன்று ஷிண்டோ; மற்றொன்று புத்த மதம்.

புத்தமதம் என்பது ஜப்பானுக்கு கொரியா, சீனா வழியாக வந்து சேர்ந்தது. ஆறாவது நூற்றாண்டிலிருந்து எட்டாம் நூற்றாண்டு வரையிலான காலகட்டத்தில் இங்கே பரவியது. இந்த இரண்டு மதங்களுமே மனித இயல்பின்மீது மிகவும் நம்பிக்கை வைத்துள்ளன. அதேபோல் உலகத்தின் மீதும் நம்பிக்கை வைக்கின்றன.

ஷிண்டோ மதத்தினர் புத்தரை இன்னொரு காமியாகக் கருதினார்கள். அதற்கு இணங்க ஜப்பானில் புத்தரும் வெவ்வேறு புத்தர்களாகவும், போதி சத்துவர்களாகவும் உருவாக்கப்பட்டு, அதன் மூலம் ஷிண்டோ மதத்தின் 'காமி' இயல்புக்கு ஒத்துப் போவதாக ஆவார்.

பொதுவாக ஜப்பானியத் திருமணங்கள் யாவுமே ஷிண்டோ குருக்களால் செய்து வைக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அவர்களது மரணச் சடங்குகள் யாவும் புத்தமத குருக்களால் செய்து வைக்கப்படுகின்றன.

ஷிண்டோவிற்கு மற்ற மதங்களைப்போல் எந்தக் கொள்கைப் பிடிப்பும் கிடையாது. அது எந்த விதிகளையும் பின்பற்றுவதில்லை. பொதுவாக கன்பூஷிஸம் மதக்கொள்கைகளை ஷிண்டோக்காரர் கள் பின்பற்றுகிறார்கள்.

'சொர்க்கம்' என்று நம்புகிறார்கள், 'நரகம்' என்பது ஒரு 'இருள் சூழ்ந்த பிரதேசம்' என்றும்; இறந்தவர்கள் அங்கே போகிறார்கள் என்றும் கூறுகிறார்கள். மற்றபடி இறந்தபின் வரும் வாழ்வைப் பற்றி அவர்கள் அதிகம் கூறுவதில்லை.

இறந்த தங்கள் மூதாதையர்களை அவர்கள் அன்போடும், பக்தியோடும் தொழுகிறார்கள்.

அதைப்போல ஷிண்டோ மதத்தில் 'மஸுஹி!' என்ற ஒரு நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். இதுதான் தெய்வ நியதி. அதன்படி மனசாட்சிக்கு உண்மையாக வாழவேண்டும் என்பதே ஒவ்வொரு மனிதனின் குறிக்கோள் என்கிறார்கள்.

ஷிண்டோ மதத்தில் நான்கு முக்கிய நம்பிக்கைகள் உண்டு. ஒன்று குடும்பத்தின் ஒற்றுமை அவர்களுக்கு மிகவும் முக்கியமானது. அவர்களது குடும்பத்தில் பிறப்பும் கல்யாணமும் மிக முக்கிய நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது.

இரண்டாவது எல்லாரும் இயற்கையின்மீது அன்பு வைத்திருக்கிறார்கள். இயற்கை அவர்களுக்கு மிகவும் புனிதமானது. கடவுளுக்கு மிகவும் அருகில் இருப்பது இயற்கைதான். இதனால் அவர்கள் இயற்கையின் எந்தப் பொருட்களையும் வணங்கி வழிபடுகிறார்கள்.

மூன்றாவது, எப்போதும் தங்கள் சுத்தத்தைப் பெரிதும் மதிக்கிறார்கள். அவர்கள் முன்பெல்லாம் குளித்துவிட்டுத்தான் கோவிலுக்குச் செல்வார்கள். இப்போது கைகளைக் கழுவி, வாய் கழுவி கொப்புளித்துவிட்டு உள்ளே செல்கிறார்கள்.

காமி கடவுள்களையும் முன்னோருடைய ஆவிகளையும் வணங்குவதைப் புனிதமாக நினைக்கிறார்கள். இந்தப் பழக்கத்திற்கு 'மட்சுரி' என்று பெயர்.

## ஷிண்டோ மதத்தின் அனுஷ்டானங்கள்

ஷிண்டோ மதத்தினர் மலைகளையும், நதிகளையும், ஊற்றுகளையும், புனிதமாக நினைக்கிறார்கள். அவர்களது ஒவ்வொரு ஆலயமும் ஒரு குறிப்பிட்ட தெய்வத்திற்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது.

ஆலயத்திற்குச் சென்று மிகவும் வினயத்தோடும் பக்தியோடும் பிரார்த்தனை செய்வார்கள். அவர்கள் உள்ளே செல்லும்போது, 'டோரி' என்ற வாசல் வழியாக உள்ளே செல்வார்கள். அதுதான் கடவுளிடம் செல்லும் வழி என்று அவர்கள் சொல்லுகிறார்கள். உலக வாழ்க்கைக்கும் கடவுள் வாழ்க்கைக்கும் இடையே உண்டான ஒரு வாசல் அது என்றும் கூறுகிறார்கள்.

மிருகங்களை கடவுளின் தூதர்கள் என்று நம்புகிறார்கள். 'கோமாகினு' என்ற நாய்களை, அவர்கள் ஆலயங்களின் முகப்பில் ஒன்றுக்கொன்று எதிராகத் துவார பாலகர்களைப் போல் வைத்திருப்பார்கள். உள்ளே, சடங்குகளில் படையல், பிரார்த்தனைகள், நடனங்கள் யாவுமே 'காமி' கடவுளுக்காக அர்ப்பணிக்கப்படுகின்றன.

'ககுரா' என்பது ஒரு நாட்டியம்! புராதன சங்கீத வாத்தியங்கள், இந்த நடனத்திற்காக இசைக்கப்படுகின்றன. நல்ல பயிற்சி பெற்ற நாட்டியக் காரர்கள் இருக்கிறார்கள். அவர்கள் யர்வருமே இளம் கன்னிப் பெண்கள்! இது தெய்வத்திற்கு அர்ப்பணிக்கும் நடனம்! ஆண்களில் சிலரும் நடனத்தில் பங்கு கொள்வார்கள்.

## தாயத்து

'மமோரி' என்ற தாயத்துகளை அவர்கள் அணிகிறார்கள். அவை வியாதிகளைக் குணப்படுத்துவதற்கும், உடல் நலத்தைப் பாதுகாப்பதற்கும் உதவுகின்றன. வீடுகளில் கடவுளுக்கு ஒரு தனி இடம் கொடுத்திருக்கிறார்கள். அதற்குப் பெயர் 'காமிதன'. அங்கு கடவுள்கள் தங்குவதாக நினைக்கிறார்கள்.

## விழாக்கள்

இந்த மதத்தினர் பருவகால விழாக்களை அனுஷ்டிக்கிறார்கள். அதில் வசந்த காலத்தில் செடிகள் நடுகிறார்கள். பிறகு பிப்ரவரி 11-ஆம் தேதி ஜப்பான் தேசம் உருவான தினத்தைக் கொண்டாடுகிறார்கள். இது மதத்தோடு கலந்த ஒன்றாகி விட்டது.

அதைத் தவிர ஜனவரி ஒன்றாம் தேதி முதல் மூன்றாம் தேதி வரை புதுவருட விழாவைக் கொண்டாடுகிறார்கள். மார்ச் மூன்றாம் தேதியைப் பெண்களின் உற்சவ விழாவாகக் கொண்டாடுகிறார்கள்.

குழந்தைகள் வளரும்போது அவர்களின் குருக்கள் சடங்குகளோடு ஆசீர்வதிக்கிறார்கள். குறிப்பாக மூன்றாம் வயது, ஏழாம் வயதில் பெண்களுக்கும்; ஐந்தாம் வயதில் ஆண்களுக்கும் அந்த ஆசீர்வாதம் நடக்கிறது. இதெல்லாம் நவம்பர் 1-ஆம் தேதி நடத்தப்படுகின்றது.

இது தவிர, அவர்கள் மாதத்திற்கு ஒரு வேளை சாப்பாட்டைத் துறந்துவிட்டு, அதற்குச் செலவாகும் பணத்தைக் கோவில்களுக்கும் இதர நல்ல சேவைகளுக்கும் கொடுத்து உதவுகிறார்கள்.

## காகித ஆவி

'ஓரிகாமி' என்பது காகிதத்தின் ஆவிகள் என்று சொல்லப்படுகின்றன. இதில் ஜப்பானியரின் பரம்பரைக் கலை விளங்குகிறது. காகிதங்களை இவர்கள் விதவிதமாக மடிப்பார்கள். மடிக்கப்பட்ட அழகிய தோரணங்கள் எல்லாம் ஷிண்டோ ஆலயங்களில் தொங்கவிடப்படுகின்றன. காகிதங்களுக்கு மரங்கள்தான் காரணமாக இருப்பதால் மரங்களை அவர்கள் வணங்குவதோடு, ஒரிகாமியின் காகிதங்களை மடிப்பார்களே தவிர வெட்டுவது கிடையாது.

## ஷிண்டோவின் மதப்புத்தகங்கள்

'கோஜிகி' என்ற இவர்களது ஒரு புத்தகத்தில் பழங்கால

விஷயங்களைப் பற்றி எழுதப்பட்டுள்ளன.

'ரொக்கோகுஷி' என்னும் புத்தகத்தில் ஆறு தேசிய சரித்திரங்கள் அடங்கியுள்ளன. 'ஷோகு மிஹோங்கி', 'நிகான் ஷோகி' என்பவை ஜப்பானிய வரலாறுகளின் முக்கிய புத்தகங்கள்.

'ஜின்னோ ஷோடோகி' 14-ஆவது நூற்றாண்டில் எழுதப்பட்ட புத்தகம். இதில் ஷிண்டோ. தவிர ஜப்பானிய சரித்திரமும் அரசியலும் அடங்கியுள்ளன.

⌘⌘⌘



# 9

# இந்து மதம்

அமெரிக்காவில் உள்ள சிகாகோ நகரில் 1893-ஆம் ஆண்டு வொர்ல்ட் பார்லிமெண்ட் ஆஃப் ரிலிஜன்ஸ் (World Parliament of Religions) கூடியது.

உலகத்திலுள்ள எல்லா மதங்களின் பிரதிநிதிகளையும் அங்கே வரவழைத்திருந்தார்கள். இந்து மதத்தின் சார்பில் சுவாமி விவேகானந்தர் சென்றிருந்தார். அங்கே அவரை அனுப்பியவர்கள் ராமநாதபுரம் ராஜாவும், சென்னையைச் சேர்ந்த மக்களும் ஆவர்.

அந்தக் கூட்டத்தில் விவேகானந்தர் பேசுவதற்கு முதலில் சிறிது தயக்கம் தெரிவித்தார். இரண்டு முறை தனது உரையைத் தள்ளிப்போட்டார். மூன்றாவது முறை நிச்சயம் பேச வேண்டிய நிர்ப்பந்தம் வந்தது.

பேச எழுந்தார். மனத்திற்குள் சரஸ்வதிதேவியை வேண்டினார். உடனேயே பேச ஆரம்பித்தார். Sisters & Brothers of America என்று தொடங்கினார். அவர் அப்படி அழைத்ததுமே கூட்டத்தினர் மெய்ம்மறந்து பிரமாதமாகக் கரவொலி செய்தார்கள்.

மற்ற யாவருமே Ladies & Gentlemen என்று கூறி இருக்கும்போது, இவர் 'சகோதரிகளே சகோதரர்களே' என்று அழைத்த முறை பொது ஜனங்களைக் கவர்ந்து விட்டது. பிறகு அவரது பேச்சு பத்து

நிமிடங்கள்தான் நடந்தது. ஆனால் அதற்குள் அவருக்குக் கிடைத்த கரவொலி மாநாட்டின் கட்டடங்களை அதிர வைத்தது. அத்தனை கரவொலிகள், உற்சாகப் பாராட்டுகள் வேறு எந்த நாட்டுப் பிரதிநிதிக்கும் கிடைத்ததில்லை.

“கோடிக்கணக்கான இந்துக்களின் சார்பாக உங்களுக்கு நன்றி தெரிவிக்கின்றேன்” என்று ஆரம்பித்தவர், “நாங்கள் எங்கள் மதம் மட்டும் உண்மை என்று சொல்லவில்லை. உலகத்தில் எல்லா மதங்களும் உண்மைதான் என்று நினைப்பவர்கள்!'' என்று சொன்னதும் கரவொலி விண்ணை அதிர வைத்தது. இதுவரை எல்லாருமே மேடையில் தத்தம் மதங்கள்தான் சிறந்தது; அதைத்தான் பின்பற்ற வேண்டும் என்று கூறி இருந்தார்கள்.

விவேகானந்தர், “நாங்கள் எங்கள் மதம் மட்டும்தான் உண்மை யானது என்று நினைக்கவில்லை. உலகிலுள்ள எல்லா மதங்களும் உண்மைதான்” என்று சொன்னதும், அங்குள்ள கூட்டத்தினர் நடுவில் பெரிய மனமாற்றம் உண்டானது.

பிறகு, கடல்மடை திறந்தது போல் அவர் பேசினார். “எங்கள் பகவத் கீதையை எடுத்துக்கொள்ளுங்கள். அதில், உலகத்திலுள்ள எல்லா நதிகளும்- அவை பெரிதும் சிறிதுமாக இருந்தாலும்- கடைசியில் கடலில்தான் சங்கமிக்கின்றன.

அதேபோல் மதங்கள் பெரியதாக இருந்தாலும் சரி; சிறியதாக இருந்தாலும் சரி- அவை யாவும் இறைவனிடத்தில்தான் கொண்டு போய் நம்மைச் சேர்க்கின்றன என்று கூறப்பட்டுள்ளது.” என்றார்.

இதைக் கேட்டதும் மேலும் அவருக்குச் சிறப்பான கரவொலி கிடைத்தது. எங்கள் மதம் என்று குறிப்பிடும்போது அவர் சொன்னார்: “எங்கள் மதம் ஒரு அதிசயமான மதம். உலகத்தில் எல்லா மதக்கொள்கைகளும் அதில் அடங்கி இருக்கின்றன.

கற்காலம் தொடங்கி மனிதன் எப்படியெல்லாம் கடவுளை நினைக்க ஆரம்பித்தானோ அத்தனை வழிகளுமே இந்து மதத்தில் ஊறி இருக்கின்றன.

இந்து மதத்தில் எந்தக் கொள்கையுமே தவிர்க்கப்படவில்லை. எந்தக் கொள்கை எங்கிருந்து வந்தாலும் அவற்றை வரவேற்று ஏற்றுக்கொண்டிருந்தார்கள். இது அவர்கள் ரத்தத்தில் ஊறிய பண்பு! இது எங்கள் வேதத்திலும் கூறப்பட்டது.

‘ஸ ஏவம் விப்ர பஹுதா வதந்தி’ என்கிறது வேதம்! ‘உண்மை ஒன்றுதான். அதைப் பலர் பலவிதமாகக் கூறுகிறார்கள்’ என்பது அதன் பொருள். இந்து ஒவ்வொருவரின் உள்ளத்திலும் இந்த மனப்பான்மை அப்படியே உறைந்து விட்டது.

அதன் காரணமாகத்தான் இந்தியா எந்த மதத்தையும் வரவேற்கிறது. எதையும் தள்ளி விடுவது இல்லை” என்று கூறினார். அவரது உரையை அமெரிக்கப் பத்திரிகைகள் எல்லாம் புகழ்ந்து எழுதின. ஏராளமான பாராட்டுகள் கிடைத்தன.

இந்த சிகாகோ உரைக்குப் பிறகு விவேகானந்தர் எங்கு சென்றாலும் அவரை மக்கள் தொடர ஆரம்பித்துவிட்டார்கள். ஏதாவது கூட்டத்தில் சற்று அயற்சி ஏற்பட்டதானால் சபைத்தலைவர் எழுந்து, ‘கடைசியில் விவேகானந்தர் சிறிது நேரம் பேசுவார்’ என்று கூறினால்போதும்- எல்லாரும் திரும்பவும் வந்து உட்கார ஆரம்பித்து விடுவார்கள்!

விவேகானந்தர் பேசும்போது அமெரிக்க விஞ்ஞானிகளும் அவரது கூட்டத்திற்கு வர ஆரம்பித்துவிட்டார்கள். புதுமையான கருத்துக்கள் இவரிடம் உள்ளன என்று அவர்கள் பரவசம் அடைந்தார்கள்.

ஒரு தனி மனிதனின் முயற்சியால் உருவானது அல்ல இந்து மதம்! அதேபோல் அதற்குத் தனிக் கொள்கையும் கோட்பாடுகளும் கிடையாது. இதில் கூறப்பட்டுள்ள நீதிகள் யாவும் அந்தந்த காலத்திற்குத் தகுந்தாற்போல் மாறிக்கொண்டே வரும்.

பொதுவாக, இந்து மதம் மற்றவர்களை மத மாற்றம் செய்ய எந்தவிதக் கவலையும் படுவதில்லை. ஒவ்வொரு மனத்திலும் ஒரே பரம்பொருள்தான் வேலை செய்து வருகிறது என்று இந்துவிற்குத் தெரியும். அப்படி விசாலமாக நினைக்கும் இந்து மதம் இன்று உலகில் மூன்றாவது பெரிய மதமாகத் திகழ்கின்றது. முதலில் கிறிஸ்துவ மதம், இரண்டாவது இஸ்லாம் மதம், மூன்றாவது இந்து மதம்.

இந்துக்களின் வழிபாட்டு உருவங்கள் ஆயிரக்கணக்கில் உள்ளன. அதைப் பற்றி இந்து கவலைப்படவில்லை. அவரவர் தங்கள் இஷ்டப்பட்ட உருவத்தை வழிபடுவார்கள் என்று நினைத்துக் கொள்வார்கள். இஷ்ட தெய்வம் என்பது இந்து மதத்தின் முக்கிய ஜனநாயக அடிப்படை!

இந்துவின் பரந்த மனப்பான்மையையும் எல்லாவற்றையும் சகித்துக்கொள்ளும் தன்மையையும் இது காட்டுகிறது.

வெளிநாட்டிற்குச் சென்று இந்துக்கள் பிரசாரம் செய்வதில்லை. பிரசாரம் தேவையில்லை என்று அவர்களே கூறுவார்கள். ஏனெனில், இந்துவின் கருத்துக்கள் உலகெங்கும் இன்று ஏதாவது ஒருவிதத்தில் ஊடுருவி இருக்கிறது.

⌘⌘⌘



# 10

# வைணவம்

இந்து சமயம் பல உயரிய உண்மைக் கொள்கைகளைத் தன்னகத்தே கொண்ட பரந்த சமயமாகும்.

இந்து மதத்தில் பல்வேறு கிளைகள் உண்டு! ஒவ்வொரு கிளையும் தனித்தனி சமயமாகவே இருக்கக்கூடியவை. அவற்றில் வைணவமும் ஒன்று.

எங்கும் பரந்து- என்றும் நிலைத்துள்ள பொருளுக்குப் 'பரம் பொருள்' என்று பெயர். அப்பொருள் எல்லாவற்றைக் கடந்தும், எதனுள்ளும் கலந்தும் இருப்பதால் 'கடவுள்' என்று வழங்கப்படுகிறது. இப்படி வியாபித்துப் பரவி நிற்றல் பற்றி வேதம் இறைவனை 'வியாப்னோதி இதி விஷ்ணு' என்கிறது.

இதேபோன்று 'ஸர்வத்ர-வஸதி இதி வாஸுதேவ' என்பதும் வேதம் கண்ட சொல்லாகும். பரவுதல், நிலைத்து நிற்றல் மட்டுமின்றி, தான் பரவியுள்ள பொருள் அனைத்தையும் தானே தாங்கி, தன் கருத்துப்படி இயக்கி, இறைவனாய் விளங்குபவன் என்ற முழுக்கருத்தையும் கொண்ட ஒரே சொல் 'நாராயணன்' என்பது.

'தன்னுள் அனைத்துலகும் நிற்க, நெறிமையால் தானும் அவற்றுள்

நிற்கும் பிரான்' என்கிறார் நம்மாழ்வார்.

## தத்துவச்சிறப்பு

தத்துவம்(உண்மை), ஹிதம்(நன்மை), புருஷார்த்தம் (பேறு)- இம்மூன்றையும் தெளிவுறுத்துவதே ஒரு மதம் அல்லது தரிசனம் அல்லது சமயம் என்பார்கள்.

## தத்வத்ரயம்

இதற்கு மூன்று தத்துவங்கள் என்று பொருள். 'சித்து' (அறிவுள்ள ஜீவன்), 'அசித்து' (அறிவற்ற பொருள்), 'ஈசுவரன்' (பேரறிவாளன், பேராற்றலுள்ளவன்) -இந்த மூன்றும் இணைபிரியா உண்மைப் பொருட்களாகும் என்கிறது வைணவம்.

## வேதச் சிறப்பு

ஒருவனால் ஒரு குறிப்பிட்ட காலத்தில் படைக்கப்படாமல், என்றும் தன்னாலேயே உண்மையாக விளங்குவதே வேதத்தின் சிறப்பு. ஒருவனால் ஆக்கப் பெற்றதில்லை என்பதால், ஒருவனுக்குள்ள ஐயம், திரிபு, மறதி, சோர்வு, வஞ்சகம் போன்ற குறைகள் அற்றது வேதநூல்.

கண்கூடாகவும் ஊகத்தாலும் உணர இயலாதவற்றையும் உணர்த்தும் தனிச்சிறப்பால், தனக்கு நிகரின்றித் தானே மேலான பிரமாணமாக (நிரூபண்ணமாக) நிற்கிறது வேதம்.

கடவுளைப்போல் அதுவும் அவன் நினைவில் என்றும் உள்ளதால், படைக்கப்படுவதுமில்லை; அழிவதுமில்லை. கடவுள் காட்டிய வேதம் நமக்கு கடவுளையே காட்டித் தருகிறது. இவை போன்ற சிறப்புகள் வாய்ந்தவை மட்டுமே மறை நூல்கள் எனப்படுவன.

## வேதாந்தம்

வேதத்தை விளக்கும் உப நிஷத்துக்களை வேதாந்தம் என்கிறோம். இந்த உபநிஷத்துக்களுக்கும் விளக்கம் தருவது இதிகாசங்கள்.

இறைவனுக்கு லீலா விபூதி (இவ்வுலகம்), நித்யவிபூதி (பரமபதம்) என்னும் இரண்டு விபூதிகள் உடைமையாகும். இறைவனது விளையாட்டுக்குரியது இந்த உலக உயிர்கள்தான். இதில் அவனும் விளையாடப் போக அவனே விளையாட்டில் அகப்படுகின்றான்.

இவ்வுண்மையை உணரும் சீவன்கள், 'தான், தனது' எனும்

எண்ணத்தை விட்டு இறைவனிடம் அடைக்கலம் அடைந்து, இந்த விளையாட்டிலிருந்து விடுபட்டு, பிறப்பு, பிணி, மூப்பு, இறப்பு அற்று ஒளி கொண்ட சோதியாகிய அவனை அடைந்து அடிமை செய்து நித்திய ஆனந்தம் அடைகின்றன.

### பிரஸ்தானத்ரயம்

உபநிஷத்துக்கள், வியாசரின் பிரம்ம ஸூத்ரம், கண்ணனது பகவத்கீதை ஆகிய மூன்றும் 'பிரஸ்தான த்ரயம்' எனப்படும். இந்த மூன்றும் தத்வத்ரயத்தை விளக்குபவை.

### ஸ்மிருதிகளும் இதிகாச புராணங்களும்

மனு முதலான மகான்கள் செய்த நூல்களை ஸ்மிருதிகள் என்றும்; வால்மீகி எழுதிய இராமாயணத்தையும், வியாசர் செய்த மகாபாரதத்தையும் இதிகாசங்கள் என்றும் கூறுவர். இதுபோல் பராசரர் செய்த ஸ்ரீவிஷ்ணு புராணத்தையும், வியாசர் செய்த ஸ்ரீ பாகவதம் முதலியவற்றையும் புராணங்கள் என்று கூறுவர்.

இராமாயணம், மகாபாரதம் என்னும் இரு இதிகாசங்களுள், இராமாயணம் மிகச் சிறந்தது. வியாசரிடம் பிறந்தது மகாபாரதம். வால்மீகி மாமுனிவரிடம் பிறந்தது இராமாயணம். இரண்டுமே விஷ்ணுவின் இரு அவதாரங்களைப் பற்றிக் கூறும் கதைகள்தாம். இந்த இதிகாசங்களுக்கு நிகராக வேறு இதிகாசங்கள் இந்து மதத்தில் இல்லை எனலாம்.

### ப்ரம்மசூத்திரங்களின் சிறப்பு

இந்து மதத்தில் பிரம்ம சூத்திரம் ஒரு முக்கிய நூல். பிரம்மத்தைப் பற்றி சூத்திரங்களால் விளக்கும் நூல். வியாசர் செய்த மிகச் சிறந்த நூல் இது. பிரம்ம சூத்திரத்திற்கு ஒவ்வொரு சமய ஆசாரியரும் ஒவ்வொரு உரை எழுதி இருக்கிறார்கள்.

அத்வைதம் ரீதியாக ஆதிசங்கரரும் விசிஷ்டாத்வைதம் ரீதியாக ராமானுஜரும், த்வைதம் ரீதியாக மத்வரும் உரை எழுதி இருக்கிறார்கள்.

'எம்பெருமானார் ராமானுஜர் செய்தருளிய உரை, ப்ரஹ்ம சூத்திரங்களின் உண்மைக் கருத்தை உள்ளபடி உணர்த்தும் ஒப்பற்ற உயரிய நூல்' என்பது அறிஞர் பலரின் கருத்து. இந்த உரையை 'ஸ்ரீபாஷ்யம்' என்று கூறுவார்கள். 'பாஷ்யம்' என்றால் 'உரை' என்று பொருள்.

## அருளிச் செயல்கள்

இவ்வளவிலும் தனிச் சிறப்பு பெற்ற வைணவம் இதோடு நிற்கவில்லை. அந்தந்தப் பிரதேச மொழியிலும் நுழைந்தது. ஆழ்வார்கள் தமிழில் செய்த திவ்யப்பிரபந்தங்களை அருளிச் செயல்கள் என்று கூறுவார்கள். ஆழ்வார்களின் சிறப்பினால் அவர்கள் செய்த அருட் செயல்களுக்குச் சிறப்பு உண்டு. ஆதலின் முதலில் ஆழ்வார்களைப் பற்றிய சில உண்மைகளை விவரித்துக் கூறுகிறோம்.

## திருமழிசைப்பிரான்

திருமழிசையார், பிரம்பறுக்கும் குலத்தில் வளர்ந்து யோகியானார். சமணம் மற்றும் சாக்கியம் கற்றார். சங்கரனார் ஆக்கிய ஆகம நூல்களை ஆய்ந்தார். இதனால் இறுமாந்து இருந்தார். பின்னர் பேயாழ்வார் அருளினால் வைணவ கதியில் திரும்பினார். திருச்சந்த விருத்தமும், நான்முகன் திருவந்தாதியும் இவரது நூல்கள்.

## நம்மாழ்வார்

'அருள் மாறன்' எனப்படும் சடகோபர், வைகாசி விசாகத்தில் காரிக்கு மகனாகப் பிறந்தார். 'குருகூர் நம்பி', 'நம் ஆழ்வார்' என்று பெயர் பெற்றார். திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய் மொழி ஆகிய நான்கு திவ்ய பிரபந்தங்களை நான்கு வேத சாரமாக அருளியவர். இதனால் வேதம் தமிழ் செய்த மாறன் என்று பெயர் பெற்றார்.

## மதுரகவி

குருகூர் நம்பி என்கிற நம்மாழ்வாரை அன்றி வேறு தெய்வம் அறியாத மதுரகவி என்பவர், திருக்கோளூரில் சித்திரையில் சித்திரை நாளில் உதித்தார். நம்மாழ்வாரின் அருளிச் செயல்களை ஊரெங்கும் பறைசாற்றினார்- தம்து ஒரே நூலான 'கண்ணி நுண்சிறுத்தாம்பு' மூலம்!

## குலசேகரன்

மாசிப் புனர்பூசத்தில் சேரர் குலத்தோன்றலாக வஞ்சிக் களத்தில் வந்தவர். குடப் பாம்பில் கையிட்டு, திருமால் அடியார் பழி அகற்றி, குலசேகரப் பெருமாளாகத் திகழ்ந்தவர். தாம் செய்த பெருமாள் திருமொழியில் ஸ்ரீராமாயணச் சுருக்கம், கிருஷ்ணலீலைகள், திருவரங்கம், திருமலை திவ்யதேசப் பெருமைகள் முதலியவற்றை அழகாக எழுதியுள்ளார்.

## பெரியாழ்வார்

ஸ்ரீவில்லிபுத்தூரில் ஆனி தன்னில் சோதி நாளில் வேயர் குலத்தில் தோன்றியவர், பட்டர்பிரான் எனும் விஷ்ணுசித்தர். பாண்டியப் பேரவையில் வேதங்கள் ஓதி, விஷ்ணுவின் மேன்மையை நிலைநாட்டியவர். பொங்கும் தமது பரிவால் இறைவனுக்கே 'பல்லாண்டு' பாடியவர். பெரியாழ்வார் என்று புகழப்பட்டவர். கண்ணனைப் பற்றிய பிள்ளைத் தமிழ்பாடி, யசோதையாக இருந்து கிருஷ்ண லீலைகளை அனுபவித்து எழுதியவர். இவரது 'திருப்பல்லாண்டு', நாலாயிர திவ்யப்ரபந்தத்தில் முதன்மை பெற்றுள்ளது.

## ஆண்டாள்

ஆடிப்பூரத்தில், பெரியாழ்வார் திருமகளாய் அவதரித்தவர்! திருப்பாவை எழுதி தமிழகம் எங்கும் பெயர் பெற்றவர். திருமொழிகளை நமக்கு அருளி, பகவானுக்குச் சூடிக்கொடுத்தவர். 'வேதமனைத்துக்கும் வித்தாகும்' என்னும் இந்தக் கோதைத் தமிழ், நாள் தவறாது வைணவர்கள் ஓதி வரும் ஒரு நூல்.

## தொண்டரடிப் பொடி ஆழ்வார்

அரங்கனைத் தவிர வேறு ஒருவரையும் பாடாதவர் இவர். மண்டங்குடியில், மார்கழிக் கேட்டையில் வந்து உதித்தார். திருமாலுக்குத் திருப்பள்ளி எழுச்சியும் பாடினார். தொண்டு செய்து தொண்டரடிப் பொடி என்னும் பெயர் பெற்றார்.

## திருப்பாணாழ்வார்

ஆதி பிரானின் (விஷ்ணுவின்) அங்கங்கள் அனைத்தையும், அரங்கத்தில் கண்டு மகிழ்ந்து அதை விண்டுரைத்தவரான இவர், உறையூரில் கார்த்திகையில் ரோகிணியில் பாணராய்ப் பிறந்து வளர்ந்தவர். 'என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே' என்று உரைத்தவர் இவர்.

## திருமங்கை ஆழ்வார்

கார்த்திகையில் கார்த்திகை நாளில் திருக்குறையலூரில் கள்ளர் மரபில் தோன்றி, திருவாலி நாடனாகத் திகழ்ந்தவர். வாள்வலியால் திருமணங் கொல்லையில் திருமாலிடமிருந்து திருமந்திரம் கொள்ளக் கொண்டார்.

பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திரு எழு கூற்றிருக்கை, சிறிய, பெரிய திருமடல்கள் ஆகிய ஆறு திவ்யப் பிரபந்தங்களை அருளியவர்.

இவ்விதங்களில் தமிழகத்தில் ஊற்றெடுத்து, பாரதமெங்கும் பரவிய பக்திப் பெருவெள்ளம் ஆழ்வார்களின் அருளிச் செயல்களாகப் பரிண மித்தன. ஆழ்வார் பாடல் பெற்ற மண்ணெல்லாம் திவ்ய தேசங்களாகின. நீரெல்லாம் தீர்த்தங்களாயின.

வைணவம் இராமானுஜரால் பெரு வளர்ச்சி அடைந்தது. தமிழகத்தில் மட்டுமல்ல; பாரத தேசமெங்கும்! வைணவ பக்தர்கள் அவரையே தெய்வமாகக் கொண்டாடினார்கள். வட நாட்டில் விட்டலர், சைதன்யர், துளசிதாசர், கபீர்தாசர் போன்றவர்கள் பரிணமித்து, இத் தேசத்தையே பக்திமயம் ஆக்கினார்கள். தற்சமயம் உலகெங்கும் பரந்துள்ள 'ஹரே கிருஷ்ணா' இயக்கமும் ராமானுஜர் தெளித்த பக்தி வெள்ளத்தின் ஒரு பரிணாமமே!

⌘⌘⌘



# 12

# சைவம்

இந்து சமயம் என்கிற பெருங்குடும்பத்தின் மற்றொரு முக்கிய கிளை 'சைவம்'. இது சிவனைப் பரம்பொருளாகக் கருதுகிறது.

### சிந்துநதிக் கரையில் சிவன்

'சிந்து நதி நாகரீகம்' (Indus Valley Civilisation) என்பது மிகப் பழமை யான வரலாற்றுச் சின்னங்கள் நிறைந்தது. பழமை சரித்திரம் இங்கே உறைந்து கிடக்கிறது. 'சிந்து நதி' நாகரீகத்தில் கிடைத்த பல முத்திரைகளில் சிவன் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. சிவன், திரி சூலம், நந்தி ஆகிய மூன்றுமே முத்திரைகளில் காணப்படுகின்றன. இதன் மூலம் சிவ வழிபாடு சிந்து நதி நாகரீக காலத்திலேயே இருந்திருக்கிறது என்று அறிய முடிகிறது.

சிவனைப் பற்றி வேதங்கள் புகழ்ந்து பாடியுள்ளன. ஸ்ரீருத்திரம் என்பது சிவனைப் பற்றிப் பாடிய வேத பாடல்கள். பின்னால் வந்த உபநிஷத்துகள் சிவனைப் பரம்பொருளாகச் சித்தரித்திருக்கின்றன. சைவர்களுக்கு முக்கிய வேத மந்திரம் 'ஓம் நமசிவாய' என்பது.

சைவ சமயத்தில் பெரும் தத்துவங்கள் நிறைந்திருந்தாலும், 'பக்தி'யும் ஒரு பிரதான அங்கமாக இருக்கிறது. அதுமட்டுமல்ல; சில யோகமும் சேர்ந்து அதை 'மிஸ்டிகல்' அங்கமாகவும் மாற்றி இருக்கிறது.

சைவ சமயத்தில் நிறைய மகான்களும், பக்தர்களும், யோகிகளும், சித்தர்களும் தோன்றியிருக்கிறார்கள். அவர்களால் சைவம் ஆல்போல்

தழைத்து வளர்ந்துள்ளது.

சைவர்கள் பரம்பொருளான சிவனை லிங்க ரூபமாக வழிபடுவார்கள். லிங்கம் என்பது எல்லாப் பிரபஞ்சங்களையும் தன்னுள் அடக்கிய ஒரு சின்னமாக விளங்குகிறது. யாகங்களில் நிறுவப்படும் யூத ஸ்தம்பமும் பின்னால் லிங்க வழிபாட்டுக்கு வழிவகுத்தது என்று கூறுவோரும் உண்டு.

இந்தியாவில் சைவ மதம் தென்னாட்டில்தான் அற்புதமாக வளர்ந்துள்ளது. அதுவும் தமிழகத்திலும் தமிழர்கள் வாழும் இலங்கையிலும் இது பிரமாதமாக வளர்ந்திருக்கிறது. சைவ நெறியாளர்கள் தென்னாடெங்கும் கோவில்களை அமைத்துள்ளனர். அவை யாவும் அரச பரம்பரையின் உதவியால் பெரிய கலைப் பொக்கிஷங்களாக விளங்குகின்றன.

சிவன் கோயிலினுள் பல மூர்த்திகள் தென்படுவார்கள். சைவம் என்பது பொதுவாக அத்வைத கொள்கையைப் பின்பற்றுகிறது. (பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஒன்றுதான் என்று சொல்வது அத்வைதம்) சிவன், சக்தி ஆகியோரின் அம்சங்கள்தான் வெவ்வேறு தெய்வங்களாக விளங்குகின்றன. இவைதான் மூர்த்திகள் எனப்படுகின்றன. மூர்த்திகளில் முக்கியமானவர் கணேசர். கணங்களுக்கு எல்லாம் அதிபதியாக விளங்குகிறார்.

சக்தியின் சொரூபிணியாக விளங்குபவள் அம்பாள்!

12 ஜோதிர்லிங்கங்கள் நாட்டின் பல இடங்களில் வியாபித்துள்ளன. வாரணாசி சைவர்களுக்கு முக்கிய தலமாக இருக்கிறது. வாரணாசிக்கு அடுத்தபடியாக முக்கியத்துவம் உள்ளது ராமேஸ்வரம்! இவை இரண்டின் மூலம் வடக்கையும் தெற்கையும் இணைத்துள்ளார்கள் நம் முன்னோர்கள்.

வாழ்நாளில் இந்த இரண்டு க்ஷேத்திரங்களுக்கும் சென்று வரவேண்டும் என்பது எல்லாருக்கும் ஒரு புனிதக் கடமையாக இருக்கிறது.

## சைவத்தின் கிளைகள்

தென்னிந்தியாவில் நாயன்மார்கள் தோன்றி பக்திப் பரவசத்தை எங்கும் பரவவிட்டார்கள். பல இடங்களில் பலவித கொள்கைகளுடைய கிளைகளும் சைவத்தில் தோன்றின. சைவத்தில் ஒரு கிளை அங்கம்

இன்னொரு கிளை அங்கத்தோடு எந்தவிதத்திலும் சண்டையோ, சச்சரவோ வைத்துக்கொள்ளவில்லை. அவரவர் வழிகளில் செல்கிறார்கள். இதனால் புதுவித நெறிகளும், புதுவித வழக்கங்களும் தாமாகத் தோன்றின. அதை எல்லாரும் இயல்பாக ஏற்றுக் கொண்டுள்ளார்கள்.

## சைவத்தின் மூன்று பெரும் கிளைகள்

சைவம் மூன்று பெரும் கிளைகளாகப் பிரிந்துள்ளன. அதில் காஷ்மீர சைவம் ஒன்று.

சைவக் கொள்கைகளில் இருந்த சில முரண்பாடுகளைக் களைவதற்காகவே இந்தக் காஷ்மீர சைவ மதம் ஆயிரம் ஆண்டுகளுக்குமுன் காஷ்மீரில் அபினவ குப்தா என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது.

அத்வைத ப்ரமாண கொள்கைகளும், வைஷ்ணவ ப்ரமாண கொள்கைகளும், யோகங்களும் இதில் சேர்ந்துள்ளன. புத்த சமயத்தின் கொள்கைகளின் வாசனைகளும்கூட காஷ்மீர சைவ மதத்தில் நிரம்பி வீசுகிறது. பல நூற்றாண்டுகளுக்குப் பின்தான் இந்தக் கிளைக்கு 'காஷ்மீர் சைவ மதம்' என்ற பெயர் ஏற்பட்டது. அதற்கு முன்பாக 'பிரத்யபிஞ்ஞ தர்சனம்' என்பதுதான் இதன் பெயராக இருந்தது.

காஷ்மீர சைவத்தின் தத்துவங்கள் 'ஸ்வச்சந்த', 'நேத்ர', 'விஞ்ஞான வைரவ' என்ற மூன்று முக்கிய ஆகமங்களில் அடங்கியுள்ளன. தத்துவங்களும் அதைச் சார்ந்த வெவ்வேறு கொள்கைகளும் நிறைய இருந்தாலும், காஷ்மீர சைவத்தில் பொதுவான கொள்கை பல உண்டு. அதைப் பார்ப்போம்.

## சிருஷ்டி

உலக சிருஷ்டிகள் எல்லாமே சிவனின் பரிணாமங்களே! அவை யாவும் சிவன் அன்றி வேறு அல்ல! ஆனால் சிருஷ்டிகள் தனித்தனியாக இருப்பதுபோல் தோன்றுகின்றன. சிருஷ்டிகளுக்கு ஜீவாத்மா என்று பெயர். பந்தத்தில் சிக்கிய ஜீவாத்மாவை 'பசு' என்கிறார்கள்.

'பிரத்யபிஞ்ஞ' வழிகளை அனுசரிப்பதன் மூலம் ஜீவாத்மா தன்னைச் சூழ்ந்திருக்கும் போர்வைகளை அகற்றி சிவனோடு ஐக்கியமாகி விடமுடியும்.

'பிரத்யபிஞ்ஞ' என்றால் ஜீவன் தன்னைத் தானே சிவன் என்று உணர்வது. இந்த உணர்தல் மூலம் சிவனோடு ஐக்கியமாவதைத்தான் 'முக்தி' அல்லது 'மோட்சம்' என்கிறார்கள். மோட்சம் அடைய நாம்

பல முயற்சிகள் எடுக்க வேண்டும். அதில் பக்தி முதன்மையானது.

இரண்டாவதாக சாஸ்திரங்களில் கூறியிருப்பதைக் கேட்க வேண்டும். படிக்க வேண்டும். அறிய வேண்டும். யோகத்திலும் முயற்சி செய்ய வேண்டும். ஆனால் மோட்சம் என்பது சிவனின் அனுக்கிரகத்தால் ஏற்படுவதே அன்றி வேறல்ல.

சிவனே தன்னைப் போர்வைகளால் மூடிக்கொண்டு ஜீவன் (ஜீவாத்மா) ஆகிறார். பிறகு சிவனே தனது போர்வைகளைக் களைந்து விட்டு தன்னைத் தானே விடுவித்து பழையபடி சிவன் ஆகிறார்.

'தத் த்வம் அஸி' (நீதான் அது) என்ற பிரசித்தி பெற்ற உபநிஷத் வாக்கியத்தின் சாரமே இது!

## சைவ சித்தாந்தம்

சைவ சமயத்தின் கொள்கையை சைவ சித்தாந்தம் என்பார்கள். தமிழகத்தில் கிட்டத்தட்ட 1,300 வருடங்களாக இது வளர்ந்து வந்திருக்கிறது. 'சிவஞான போதம்' என்னும் நூல் மூன்று முக்கிய அடிப்படைகளைக் கூறுகிறது. பசு, பதி, பாசம் என்பதே இந்த அடிப் படைகள்!

சாதனை செய்வதன் மூலம் பசு என்பது பாசம் என்னும் தளையைக் கடந்து பதியை உணர்ந்து கொள்ள வேண்டும். இந்த உணர்தல் மூலம் 'பவ' என்ற 'கனி'யைப் பெற வேண்டும் என்கிறது சிவஞான போதம்.

13-ஆவது நூற்றாண்டில் வாழ்ந்த மெய்கண்டார் என்பவர்தான் தமது நூலான 'சிவஞான போத'த்தில் சைவ சமய சாரத்தை வரையறுத்தார்.

அவரது நூலில் சைவத்தை 12 சூத்திரங்களாக வடித்திருக்கிறார்.

இவரது சீடரான அருணந்தி என்பவர் எழுதிய 'சிவஞான சித்தியார்' மற்றொரு சைவசமய ஞான விளக்கமாகக் கருதப்படுகிறது. இந்த நூலுக்கு எழுதப்பட்ட பல விளக்க உரையை இப்போது நிறைய பக்தர்கள் படிக்கிறார்கள். கி.பி.1000-த்தில் 'நம்பி ஆண்டார் நம்பி' என்பவரால் சைவ சித்தாந்தம் வளமாக்கப்பட்டது.

## பக்தி இயக்கம்

வெறும் தத்துவங்களில் அதிகம் செல்வதைவிட, பக்தியில் ஊறித் திளைத்திருப்பது சைவ சித்தாந்தம்! 7-ஆவது நூற்றாண்டிலிருந்து 12

வரை வாழ்ந்த 63 நாயன்மார்கள்தான் இந்த பக்தி இயக்கத்தைப் பெரிதும் வளர்த்தார்கள்.

## வீர சைவம்

இந்த சைவ சமயக் கிளை கர்நாடக ராஜ்யத்தில்தான் அதிகமாகப் பரவியிருக்கிறது.

வீர சைவத்தை 'லிங்காயத' மதம் என்றும் கூறுவார்கள். வீர சைவத்தில் வைதீகர்கள் தங்கள் சமயம் வெகு புராதன சமயம் என்று சொல்வார்கள். தேவனாராயத்யர், மருலாராத்யர், பண்டிதாராத்யர் என்பவர்களும் மேலும் பலருமே இந்தச் சமயத்தைத் தோற்றுவித்தார்கள்.

ஆனால் கி.பி.1168 'பஸவேச்வர' என்பவர்தான் இதன் மூலகுரு என நம்பப்படுகிறது. இவரை 'பஸவண்ணா' என்றும்; 'பஸவ' என்றும் அழைப்பார்கள்.

இவர் பிஜ்ஜாலா என்ற அரசரிடம் பிரதம மந்திரியாக இருந்தார். பிஜ்ஜாலா கி.பி. 1157-லிருந்து 1167 வரை ஆண்டார். பிரதம மந்திரி பஸ வண்ணா வீர சைவத்தை ஒழுங்குபடுத்தி சீர்திருத்தம் செய்தவர்.

இந்த மதச் சீர்திருத்தம் சமூக சீர்திருத்தமாகவும் விளங்கியது.

## லிங்காயதக் கொள்கைகள்

**லி**ங்கம் என்பது யாகங்களில் வணங்கப்படும் யூப ஸ்தம்பத்தின் சின்னம் என்று பலர் கூறுவர். லிங்காயதக் கொள்கைகள் சிவ லிங்கத்திற்குப் பிரதானம் அளிக்கிறது. அதுதான் சிவனின் ஒரே சின்னம் என்று கருதுகிறது. அதனால்தான் 'லிங்காயதம்' என்ற பெயர் வந்துள்ளது.

லிங்கத்தை ஒரு குருவிடமிருந்து 'தீட்சை' என்ற சடங்கில் பெற்றுக்கொள்ள வேண்டும். எப்போதும் அந்த லிங்கத்தை உடம்பில் தரித்திருக்க வேண்டும். 'ஓம் நமசிவாய' என்ற பஞ்சாக்ஷரி மந்திரம்தான் முக்கிய மந்திரம்.

லிங்காயதத்தின் சித்தாந்தம் 'சக்தி விசிஷ்டாத்வைதம்' என்பது.

ஆணவ மலம், மாயீயமலம், கர்ம மலம் என்ற மூன்று மலங்கள் மனிதனைப் பீடிக்கின்றன. 'பசு' என்கிற மனித ஜீவனுக்குப் 'பதி' என்கிற

சிவனைப் போன்றே மெய்ஞ்ஞானம் உள்ளது. மூன்று மலங்களையும் அழித்து பதி அல்லது சிவனில் கலக்க ஒவ்வொரு வரும் தீட்சை பெறவேண்டும். பெண்களுக்கும் தீட்சை உண்டு.

தீட்சைகளின்போது லிங்கத்தை குருதீட்சையாகப் பெற்று கழுத்தில் அணிந்திருக்க வேண்டும். ஒரு வெள்ளிப் பேழையில் இந்த லிங்கம் வைக்கப்பட்டிருக்கும். இந்த வெள்ளிப் பேழையைத்தான் தீட்சையில் அணிவிப்பார்கள். தீட்சை பெற்றபின் ஐந்து விரதங்களைப் பின்பற்ற வேண்டும்.

1. **லிங்காசாரம்:** தினம் லிங்கத்தை வணங்க வேண்டும்.

2. **சதாசாரம்:** நல்ல வழிகள் மூலம்தான் பொருள் சம்பாதிக்க வேண்டும். சேமிப்புப் பொருளை தர்மங்களுக்கு உபயோகிக்க வேண்டும். சாதுக்களையும் ரட்சிக்க வேண்டும்.

3. **சிவாசாரம்:** லிங்காயதர்கள் யாரையும் சிவன் என்றே நினைத்து சமமாகப் பார்க்க வேண்டும்.

4. **பிருத்யாசாரம்:** பணிவோடு சிவனுக்கும் அவன் அடியவர்களுக்கும் சேவை செய்ய வேண்டும்.

5. **அணாசாரம்:** தன் மதத்தை எப்படியும் காப்பாற்ற வேண்டும். தன் கடவுளை யாரும் அவமதிப்பதை அனுமதிக்கக் கூடாது. மிருகங்களை வதைப்பதை அனுமதிக்கக் கூடாது.

இந்த ஐந்து ஆசாரங்கள் தவிர எட்டு ஆவரணங்கள் உண்டு (அஷ்டாவரணங்கள்).

1. **குரு:** குரு மீது அத்யந்த விசுவாசமும் நம்பிக்கையும் வைக்க வேண்டும்.

2. **லிங்கம்:** லிங்கத்தை பயபக்தியுடன் தொழவேண்டும். அதன் மீது மதிப்பு அதிகம் வைக்க வேண்டும்.

3. **ஜங்கம்:** அடியவர்களையும், எதிரிகளையும், பிச்சை எடுப்பவர்களையும் மிக மரியாதையாக நடத்த வேண்டும்.

4. **பாதோதகம்:** குரு அல்லது மகான்கள், பிச்சை எடுப்பவர்கள் ஆகியோரின் பாதங்களைக் கழுவிப் புனிதநீரைப் பருக அல்லது புரோக்ஷணம் செய்து கொள்ள வேண்டும்.

5. **பிரசாதம்:** பூஜை செய்து கடவுளுக்குப் படைக்கப்பட்ட

பிரசாதத்தை (உணவை) ஏற்றுக்கொள்ள வேண்டும்.

***6. பஸ்மம்:*** விபூதியை நெற்றியிலும் உடம்பின் இதரப் பகுதிகளிலும் சாஸ்திரப்படி பூசிக்கொள்ள வேண்டும்.

***7. ருத்ராக்ஷம்:*** ஜபத்திற்காக ருத்ராக்ஷ மாலையை உபயோகிக்க வேண்டும். ருத்ராக்ஷத்தை உடம்பில் அணிந்துகொள்ள வேண்டும்.

***8. மந்திரம்:*** தீட்சை அளித்த குரு சொல்லியபடியே பஞ்சாக்ஷர மந்திரத்தை (நமசிவாய) ஜபிக்க வேண்டும்.

ஐந்து ஆசாரமும், எட்டு ஆவரணங்களும், ஒரு வீரசைவனைப் (லிங்காயதத்தை) புனிதம் ஆக்கிவிடுவதால் அவன் சூதகம் என்ற தீட்டு முதலிய ஆசாரத்தையும் அனுஷ்டிக்க வேண்டியதில்லை. அதேபோல் அவன் இறந்தபின் அவன் உடலை எரித்துத்தான் புனிதம் ஆக்க வேண்டியதில்லை. அதனால் அவன் உடலைப் புதைத்துவிட வேண்டும்.

## விசிஷ்டாத்வைதம்

ராமானுஜர் 120 ஆண்டுகள் வாழ்ந்தார். (கி.பி.1017-லிருந்து 1137 வரை) அவர்தான் விசிஷ்டாத்வைதம் என்ற சித்தாந்தத்தைக் கொண்டு வந்தார்.

விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தின்படி, பிரம்மம் என்பது அத்வைதம். அதாவது இரண்டற்றது; ஒன்றாக இருப்பது. ஆனால் பிரம்மத்தில் பிரகிருதி இயற்கை அல்லது நாம் காணும் பொருட்கள் என்பதும்; ஜீவன் என்பதும் சேர்ந்து இருக்கின்றன. அவற்றை பிரம்மத்திடமிருந்து வித்தியாசப்படுத்த முடியாது. எனவேதான் விசிஷ்ட அத்வைதம் என்று இதற்குப் பெயர் வைத்தார்கள்.

பிரம்மம் தனியாக இருந்தாலும், அதனுடன் பிரகிருதி என்பதும் ஜீவன் என்பதும் சேர்ந்தே உள்ளன. இந்த சித்தாந்தத்தைத்தான் வீரசைவம் ஏற்றுக் கொண்டது.

சிவம் என்பது தானாக இருந்தாலும், சக்தியுடன் இயங்குவது. சக்தியினால்தான் சிருஷ்டிகள் நடக்கின்றன; சிருஷ்டிகள் காப்பாற்றப் படுகின்றன; சிருஷ்டிகள் அழிக்கவும் படுகின்றன. எனவே சிவத்திடமிருந்து சக்தியைப் பிரித்துப் பேச முடியாது.

வீரசைவத்தில் சிவன் அல்லது பிரம்மத்தை ஸ்தலம் என்கிறார்கள். ஸ்தலம் என்றால் 'இடம்'. இடம் என்பது பரந்தது. ஸ்தலத்திலி ருந்துதான் உலகமே உற்பத்தியாகிறது. ஸ்தலத்திலேயே உலகம்

உற்பத்தியாகி, ஸ்தலத்திலேயே வாழ்ந்து ஸ்தலத்திலேயே அது முடிவடைகிறது.

இந்த 'ஸ்தல' சித்தாந்தப்படி சிவன் இரண்டு பின்னமாகிறார். ஒன்று லிங்கம். இன்னொன்று அங்கம். லிங்கம் என்பது அவர்தான். அங்கம் என்பது மனித ஜீவனைக் குறிக்கும்.

இந்த இரண்டுமே மீண்டும் மூன்று பகுதிகளாகப் பின்னமாகின்றன. லிங்கம் என்பது இஷ்ட லிங்கம், பிராண லிங்கம், பாவ லிங்கம் என்றும்; அங்கம் என்பது தியாக அங்கம், போக அங்கம், யோக அங்கம் என்றும் பின்னமடைகிறது.

ஜீவன் தனது உலகப் பற்றுகளை விட்டு வில்கும்போது அது தியாக அங்கமாக மாறுகிறது. அப்பொழுது ஜீவனுக்குத் தீட்சையாக குரு கொடுத்திருக்கும் லிங்கமானது இஷ்ட லிங்கமாக மாறும். இஷ்ட லிங்கத்தைத்தான் ஜீவன் உபாசித்து வரவேண்டும்.

இஷ்ட லிங்கத்தை இப்படி உபாசனை செய்வதன் மூலம் ஜீவன் புனிதமாகிறான். இதன் பிறகு அவன் சிவனது கிருபையால் உலக இன்பங்களை அனுபவிக்கிறான். அப்போதுதான் அவன் போக அங்கமாக மாறுகிறான். தனது இதயத்தில் குடிகொண்டிருக்கும் சிவனை இதன் மூலம் பிராண லிங்கமாக அனுபவிக்கிறான்.

இவ்விதத்தில் ஜீவன் முன்னேறி ஒரு உயர்ந்த ஞானத்தை அடைந்து, அவன் யோக அங்கமாக மாறிவிடுகிறான். அதன் பிறகு சிவனுடன் ஐக்கியமாகி மெய் இன்பத்தை அனுபவிக்கிறான். இதை பாவ லிங்கம் என்று சொல்வார்கள்.

உலகத்தில், அனாதிகாலத்தில் இருந்த சைவத்தில் வீரசைவம் தழைத்து வந்தது. இதனால் அதில் நிறைய மகான்களும், யோகிகளும், சந்நியாசிகளும் தோன்றினார்கள்.

அவர்கள் பிரசாரத்தினால், சமூகத்தில் ஏற்ற தாழ்வற்ற சமஉரிமை வளர்க்கப்பட்டது. எப்போதும் பணி செய்ய வேண்டும். பணி என்பது ஒரு சமூகக் கடமை! அதைக் கட்டாயம் ஒருவர் செய்தாக வேண்டும். அதன் வழியாகத்தான் ஒருவர் ஆன்ம முன்னேற்றம் அடைய முடியும்.

வீரசைவத்தின் தத்துவ விளக்கங்களால் இந்து மதம் மிகவும் மேம்பட்டிருக்கிறது.

**சை**வ மதம் சிறியதாகத் தொடங்கி பெரிய மதமாக வளர்ந்தது.

அதற்குச் சிவன்தான் முக்கியத் தெய்வம். இந்த சைவம் பிற்காலங்களில் பல வகையில் கிளைகளாகப் பிரிய ஆரம்பித்தது.

அதில் பல புது எண்ணங்களும், பழக்கங்களும் புகுந்து கொண்டன. இவை பல சித்தாந்தங்கள் ஆனாலும், இவற்றில் முக்கியமான ஆறுவித சித்தாந்தங்கள்தான் இந்தியாவில் நிலைத்திருந்தன. அவற்றைப் பற்றி இங்கே காண்போம்.

## 1. காளாமுகர்

வேதத்தில் ருத்திரனை மிகவும் பயங்கரமாக வர்ணித்திருக்கிறார்கள். இந்த ருத்திரனைச் சுற்றிதான் பலவித சித்தாந்தக் கிளைகள் தோன்ற ஆரம்பித்தன. அவற்றில் ஒன்றுதான் காளாமுகம். மற்றொன்று காபாலிகம். கடைசியாக வாமாசாரம்.

இந்தக் காளாமுகர்களும், காபாலிகர்களும் ருத்திர சைவத்தில் பைரவரையும், சண்டியையும் வணங்குகிறார்கள்.

வடமொழியில் 'காளா' என்றால், 'கருப்பு வண்ணம்' என்று பொருள். 'முக' என்றால் 'முகம்' என்று பொருள். இவர்கள் தங்கள் முகங்களில் கருப்பு வண்ணம் பூசிக்கொண்டதால் 'காளாமுகர்' என்ற பெயர் ஏற்பட்டது.

இவர்களது மதங்கள் கி.பி.700-லிருந்து 1200 வரை ஆந்திரப் பிரதேசம், கர்நாடகம் போன்ற இடங்களில் மிகவும் செல்வாக்கு உள்ளதாக வளர்ந்தது.

கர்நாடகாவில் 'ஷிமோகா' மாவட்டத்தைச் சேர்ந்த 'பள்ளிகரே' என்ற ஊரில் கேதாரீஸ்வரர் கோவில் இருக்கிறது. அதேபோல் கர்னூலுக்கு அருகே உள்ள ஸ்ரீசைலத்திலும் கோவில் ஒன்று உள்ளது. அந்த நாட்டில் பலம் வாய்ந்த காளாமுகர்களால் இவ்வாலயங்கள் ஏற்படுத்தப்பட்டன.

பதினோராம் நூற்றாண்டைச் சேர்ந்த சாளுக்கிய மன்னர்கள் இந்த மதத்திற்கு மிகவும் ஆதரவாளர்களாக இருந்துள்ளார்கள். இவர்களது முக்கிய குருவாக இருந்தவர்கள் சர்வேஸ்வரரும் சக்திதேவரும் ஆவர். இவர்கள்தான் 77 கோவில்களுக்கு அதிபதியாக இருந்தார்கள். இவர்கள் யாவரும் படித்த பண்டிதர்களாக இருந்தார்கள். மிகவும் எளிமையாக வாழ்ந்தார்கள். எனினும் சிலவித பயங்கர பழக்கங்கள் இவர்களிடையே இருந்தன. இவர்கள் மனித மண்டையோட்டில்தான் மதுவை ஊற்றிக்

குடிப்பார்கள். தங்கள் உடம்பெல்லாம் சுடுகாட்டுச் சாம்பலைப் பூசிக்கொள்வார்கள். அவர்களிடையே மிகவும் கீழ்த்தரமான ஒழுக்கங்கள் புகுந்தன. இதனால் சமூக வரம்பிற்கு அப்பாற்பட்டவர்கள் என்று இவர்களை மற்றவர்கள் ஒதுக்கி வைத்தார்கள்.

கி.பி.1370-ஆம் ஆண்டு வாழ்ந்த ராஜராஜ குரு என்பவர் ஒரு முக்கிய சக்தி வாய்ந்த குருவாக வாழ்ந்து வந்தார். இவர் அதே நூற்றாண்டில் வாழ்ந்த வித்யாரண்யர் (விஜயநகர சாம்ராஜ்யத்தை ஸ்தாபிக்க உதவியவர்) என்பவருக்குச் சமகாலத்தில் வாழ்ந்தவர் ஆவார்.

## 2. காபாலிகர்கள்

கபாலம் என்றால் மண்டை ஓடு என்று அர்த்தம். இவர்கள் மண்டை ஓட்டைத்தான் திருவோடாக உபயோகித்தார்கள். அதில்தான் பிச்சை எடுப்பது வழக்கம். தங்கள் கழுத்தைச் சுற்றி மண்டை ஓடுகளால் ஆன மாலையையும் அணிந்திருந்தார்கள்.

இவர்கள் கி.பி.ஏழாவது நூற்றாண்டில் மிகவும் செல்வாக்கு வாய்ந்தவர்களாக இருந்தார்கள். ஏழாம் நூற்றாண்டு தொடங்கி ஐந்நூறு ஆண்டுகள் இவர்கள் ஸ்ரீசைலத்தில் பெருவாரியாக வாழ்ந்தார்கள்.

## தமிழகத்தில் காபாலிகர்கள்

தமிழகத்தில் காஞ்சிபுரம், திருவொற்றியூர், மேலப்பாடி, கொடும் பாவூர் போன்ற இடங்களில் இவர்கள் வாழ்ந்து தங்கள் மதங்களை வளர்த்து வந்தார்கள். இவர்கள் பைரவர் என்பவரையும், சண்டி என்பவளையும்தான் வணங்குவார்கள்.

இவர்கள் மது அருந்துவார்கள். சுடுகாட்டுச் சாம்பலைப் பூசிக் கொள்வார்கள். சில மாமிசங்களைச் சாப்பிடுவார்கள். இவர்களின் ஒழுக்கங்கள் மிகவும் மோசமானவை. அவர்கள் தங்களைச் சார்ந்த எல்லாப் பெண்களிடமும் உறவு வைத்துக் கொள்வார்கள்.

'சபர தந்தர' என்ற நூலின்படி இவர்களது குருக்கள் வழியில் ஆதிநாதர் தொடங்கி 24 குருக்கள் வாழ்ந்தார்கள். கடைசியாக வாழ்ந்த குரு பெயர் மலையார்ஜுனர் என்பது. இவர்கள் வைஷ்ணவ விரோதிகள். வைஷ்ணவத்தைத் தீவிரமாக எதிர்த்தார்கள்.

## தாந்திரிகம்

இங்கே தாந்திரிகம் பற்றிக் கூற வேண்டும். தாந்திரிகம் என்பது

காஷ்மீரில்தான் துவங்கியதாகக் கூறுகிறார்கள். அதன் வியாபகம் இந்தியா முழுவதும் பரந்து கன்னியாகுமரி வரை சென்றுள்ளது. கன்னியாகுமரியில் தாந்திரிக முறைதான் கையாளப்படுகிறது. தேவி வழிபாட்டில் கன்னியாகுமரியும் ஒன்று!

தாந்திரிகர்கள் நல்ல சாதனையாளர்களாக இருந்திருக்கிறார்கள். இப்போதும் இருந்து வருகிறார்கள். இவர்கள் சில அற்புதங்களைத் தாந்திரிகம் வழியில் உண்டாக்க முடியும். இந்த அற்புதங்களைத்தான் பலர் விரும்புகிறார்கள்.

தாந்திரிக வழிபாட்டில் வாமாசாரத்தையும் நாம் குறிக்க வேண்டி வருகிறது.

வாமாசாரத்தைப் பற்றி மோசமான விமர்சனங்கள்தான் அதிகமாக வந்திருக்கின்றன. இந்த 'வாமாசாரம்' என்ற சித்தாந்தத்தின் பழக்க-வழக்கங்கள் இந்தியாவில் மட்டும்தான் உள்ளது என்று நினைக்க வேண்டாம். மேலை நாடுகளிலும் இவற்றுக்குச் சமமான சித்தாந்திகள் உள்ளார்கள்.

இதைப் பற்றி பிரசித்தி பெற்ற அயல்நாட்டுக்காரர் Sr. John Woodroffe என்பவர் கூறியிருக்கிறார். "நான் இந்த வழிபாட்டுக்காரர்களை 'தக்ஷீனாசாரம்' என்றும்; 'வாமாசார்ம்' என்றும் பிரித்திருப்பதைக் குறிப்பிடுகிறேன். குறிப்பாக இந்த 'வாமாசாரம்' என்பதன் சாதனைகளும் பழக்க- வழக்கங்களும் நாட்டில் மிகக் கேவலமாக வர்ணிக்கப்படுகிறது.

இந்தச் சித்தாந்தம் பற்றி நான் இங்கே கூறுகிறேன். 'வாமாசாரம்' என்று கூறப்படும் இந்தத் தந்திர சாஸ்திரத்தை Black Magic என்று பலர் சொல்வார்கள். மேஜிக் என்றால் உங்களுக்குத் தெரியும். அது மாய மந்திரத்தால் செய்யும் ஜால வித்தைகள். வாமாசாரத்தை இன்னொரு விதத்தில் Erotic Mysticism என்றும் சொல்வார்கள்.

இப்படி சொல்பவர்கள் பெரும்பாலோர் தந்திரம் என்பதை அறிந்ததுமில்லை; படித்ததுமில்லை; அதை அனுசரித்ததுமில்லை. அவர்கள் வாமாசாரத்தைப் பற்றிய ஏதாவது ஒரு பகுதியை எங்கேயாவது படித்துவிட்டு அதைப் புரிந்து கொண்டதுபோல் நடந்து கொள்வார்கள். புனிதமான சித்தாந்தத்தை இவர்கள்தான் வீணாகப் பழிக்கிறார்கள்.

இந்த ஆசாரத்தில் நிறைய ஒழுக்கங்கள் உள்ளவர்கள், சட்ட-

திட்டங்களை அனுசரிப்பவர்கள் மாத்திரமே சேர்க்கப்படுவார்கள். தேகத்தின் உணர்ச்சியை அடக்க முடியாதவர்கள் சேர்த்துக் கொள்ளப்பட மாட்டார்கள். இப்படிப்பட்ட கடுமையான சாதனையாளர்களுக்குச் சீக்கிரமாகவே சித்திகள் தொடங்கிவிடும். சித்திகள் என்றால் அற்புதங்கள் என்று உங்களுக்குத் தெரியும்.

இந்த ஆசாரத்தில் ஈடுபடுபவர்கள் மிகவும் கடுமையாகச் சோதிக்கப்பட்டுத்தான் சேர்த்துக் கொள்ளப்படுவார்கள்" என்பது ஸர் ஜான் உட்ராப் சொல்லியுள்ள கருத்து.

⌘⌘⌘

# 13



உலகத்தின் எல்லா மதங்களையும் வரிசையாகப் பார்த்தோம்.

எத்தனை மதங்கள்!
எத்தனை கொள்கைகள்!
எத்தனை தத்துவங்கள்!

கடைசியில் இந்து மதத்திற்கு வந்தோம்! இந்து மதத்தில்தான் எத்தனை வித பிரிவுகள்!

எல்லாப் பிரிவுகளையுமே பார்த்து விட்டோம் என்று சொல்ல முடியாது.

முக்கியப் பிரிவுகளை மட்டும் பார்த்தோம்.

இந்து மதம் என்பது நம்மவர்கள் வைத்த பெயர் அல்ல!

மேனாட்டுக்காரர்கள் வைத்த பெயர்.

இந்தியாவில் உள்ள அனைத்து சமயப் பிரிவுகளையும், அதனதன் கடவுள்களையும், அதனதன் கொள்கைகளையும் சேர்த்து, மொத்த மாக ஒரு பெயர் கொடுத்தனர். அதுதான் இந்து மதம்!

ஆனால் நம்மவர், அந்தக் காலத்தில் எல்லா பிரிவுகளுக்கும் சேர்த்துக் கொடுத்த பெயர் என்ன தெரியுமா?

சனாதன தர்மம்.

அதாவது நிரந்தர தர்மம்.

ஆதியிலிருந்து தொடர்ந்து வந்த தர்மம். இனியும் தொடரும் தர்மம்.

அதுதான் நம் வாழ்க்கையின் அடிப்படை.

வேதத்திலேயே இந்த தர்மத்திற்கான அடிப்படைகளைக் கூறி விட்டார்கள்!

**'ஏகம் ஸத் விப்ரா பஹுதா வதந்தி'**

**'உண்மை ஒன்றே! அதைப் பலவிதமாகக் கூறுகிறார்கள்.'**

இதையே கீதையில்,

"என்னை எந்தெந்தப் பெயர்களில் என்னென்ன வழிகளில் அடைய விரும்புகிறார்களோ, அந்தந்த வழிகளிலேயே அவர்களைச் சென்று அடைகிறேன்" என்று கூறுகிறார் கிருஷ்ணன்.

விவேகானந்தர் கூறுவதைக் கேளுங்கள்.

"உலகத்தில் எந்தத் தத்துவமும் கோட்பாடும், முன்பு இருந்தாலும் சரி; பின்னர் புதிது புதிதாகத் தோன்றினாலும் சரி- அவை யாவுமே இந்து மதத்திற்குப் புதியவையே அல்ல! இந்து மதத்தில் அவை அனைத்தும் எந்த உருவத்திலாவது நிச்சயம் இருக்கும்."

சரி; வெளிநாட்டவர் நம் மதத்தைப் பற்றி என்ன கூறுகிறார்கள்? அதைக் கவனிப்போம்.

'லைஃப்' என்ற அமெரிக்கப் பத்திரிகை, 'உலக மதங்கள்' என்ற தலைப்பில் இந்து மதத்தை முதலாகப் பிரசுரித்தது.

முதலில் பிரசுரித்ததற்கான காரணத்தையும் சொன்னது.

'இந்து மதம்தான் உலகத்தில் முதன்முதல் தோன்றிய ஒரு Organised Religion.'

1926-ல் லூயி ஜகோய்யோ சந்திரநாகூரில் (அப்போது பிரெஞ்சு ஆட்சியில் இருந்தது) முதன்மை நீதிபதியாக இருந்தார்.

'உலகத்தில் வழங்கும் எல்லா தத்துவங்களும், கோட்பாடுகளும் இந்தியாவிலிருந்துதான் சென்றன' என்று அவர் தமது 'La Bible Dams L'Inde' என்ற நூலில் எழுதினார்.

மேலும் அவர் கூறினார்:

'பழமை வாய்ந்த இந்திய பூமியே! நீதான் உலகத்து மனிதஇனத்தின் தொட்டில். தாய் பூமியே! உன் புகழ் பாடுகிறேன். உன் புண்ணிய

பூமியைப் பயங்கர படையெடுப்புகள் தீண்டினாலும், உன் தேசம் மண்ணில் புதைந்து மாண்டு விடவில்லை.

நம்பிக்கை, அன்பு, காவியம், விஞ்ஞானம் எல்லாவற்றுக்கும் உறைவிடமான தந்தை பூமியே! உன்னுடைய பழமை எங்கள் மேனாட்டு எதிர்காலத்தில் நிலைக்கட்டும்!'

18-ஆம் நூற்றாண்டு கடைசியில் பிரிட்டிஷ் ஈஸ்ட் இந்தியா கம்பெனி ஸர் வில்லியம் ஜோன்ஸ் என்ற பிரபல ஜூரிஸ்ட் சமஸ்கிருதம் படிக்க ஆரம்பித்தார்.

ஆச்சரியமாக ஐரோப்பிய மொழிகள்- குறிப்பாக லத்தீனும் கிரேக்கமும் வடமொழிக்கு ஒத்திருப்பதைப் பார்த்தார்.

அவர் சொன்னார்:

'வடமொழி, அதன் பழமை எவ்வளவு ஆயினும், அதன் ஆச்சரியமரன அமைப்பு, கிரேக்கத்தைவிட முழுமையாக உள்ளது. லத்தீனைவிடப் பெரியதாக இருக்கிறது. இரண்டையும்விட மிக அழகாக- மிக நுண்மையாக உள்ளது.'

## ஸர் வில்லியம் ஜோன்ஸ்

கி.பி.1746-ல் பிறந்த இவர் 1794 வரை உயிர் வாழ்ந்தார். இவர்தான் சமஸ்கிருதமும், வேதங்களும் படித்த முதல் பிரிட்டிஷ்காரர்.

ஆக்ஸ்போர்ட் பல்கலைக் கழகத்தில் பயின்ற இவர் 16 கிழக்கிந்திய மொழிகளைக் கற்றுத் தேர்ச்சி பெற்றவர்.

1783-ஆம் ஆண்டு கல்கத்தாவில் சுப்ரீம் கோர்ட்டின் நீதிபதியாக நியமிக்கப்பட்டார். அவர்தான் 'ராயல் ஏஷியாடிக் ஸொஸைட்டி ஆப் பெங்கால்' என்பதை நிறுவினார்.

சமஸ்கிருத நூல்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார்.

அவர் இந்து மதத்தைப் புற்றி எழுதுகிறார்:

'நான் கோபியர்களை நேசிக்கிறேன். கிருஷ்ணனிடம் மனம் பறிபோனேன்.

ராமுரை நேசிக்கிறேன். பிரம்மாவைப் புகழ்கிறேன். விஷ்ணு, மகேஸ்வரர்களையும் வெகுவாக நேசிக்கிறேன்.

தர்மர், அர்ஜுனன், கர்ணன் எல்லாருமே எனக்குப் பிரியமானவர்கள்.

மகாபாரதத்தில் வரும் யுத்தவீரர்கள் யாவருமே என் மனதில் பதிந்தவர்கள்.'

ஜே.பி.எஸ். ஹால்டேன் என்கிற மைக்ரோபயாலஜிஸ்ட் ஜெர்மனியில் உள்ள தனது சிநேகிதர் ஒருவரின் பரிசோதனைக் கூடத்தைப் பார்க்கச் சென்றார்.

அந்தக் கூடத்தின் வாசலில் பிரசித்தி பெற்ற சாந்தோக்கிய உபநிஷத்தின் 'தத் த்வம் அஸி' என்ற வார்த்தைகள் பெரிதாக எழுதப்பட்டிருப்பதையும் பார்த்தார்.

'அது என்பது நீதான்' என்ற வேதாந்தத் தத்துவத்தைக் காட்டும் அந்த வார்த்தைகள் ஹால்டேனின் மனதிலும் தைத்தன.

தவிர, அணு விஞ்ஞானி ஸ்க்ரோடிங்கர் என்பவரும் 'தத் த்வம் அஸி' என்பதை ஒரு மகா வாக்கியமாக எடுத்துக் கொண்டிருக்கிறார்.

தத்துவமேதை ஈன்ஸ்டின் கூறுகிறார்:

'இந்தியாவுக்கு நாம் கடமைப்பட்டிருக்கிறோம். அவர்கள்தான் எண்ணுவதற்கு நமக்குக் கற்றுக் கொடுத்தார்கள். அவர்களது கண்டுபிடிப்பான பூஜ்யம் இதற்கு வழிவகுத்தது.'

'நமது விஞ்ஞானக் கண்டுபிடிப்பால்தான் கீதையைப் படித்து ஊக்கம் பெற்றுக் கொள்கிறேன்.

இந்தியா ஜனசமுதாயத்தின் பிறப்பிடம்! மனிதப் பேச்சின் பிறப்பிடம்! சரித்திரங்களுக்குத் தாய், புராணத்திற்கு எல்லாம் பாட்டி! பண்பாடுகளுக்கு மூதாட்டி!' என்றார் மார்க் ட்வைன்.

'சீனாவை இந்தியா 20 நூற்றாண்டுகளாகப் பண்பாட்டில் ஜெயித்தது. ஆனால் இந்த வெற்றியைப் பெற ஒரு யுத்த வீரனைக்கூட சீன எல்லைக்குள் அது அனுப்பியதில்லை.' ஹு ஷி (அமெரிக்காவின் சீன தூதர்)

இவ்வளவு பெருமை வாய்ந்த இந்து மதம் இப்போது மேலும் தழைக்க ஆரம்பிக்கிறது. அதன் தியான யோகங்களும், சங்கீதங்களும், கலைகளும், விஞ்ஞானங்களும் வெளிநாடுகளுக்குப் போக ஆரம்பித்திருக்கின்றன.

இந்தியாவும் இந்து மதமும் வருங்காலத்தில் மிகச்சிறந்து விளங்கப் போகின்றன என்பது அசைக்க முடியாத உண்மை!

**நிறைந்தது**

₹ 275 மட்டும்!

ஜெகம் புகழும் புண்ணிய கதை

# அனுமனின் கதையே...

(அனுமனின் பூரண சரிதை)

அனுமனின் அவதாரம் தொடங்கி, ராமர் பட்டாபிஷேகம் வரையிலான அனைத்து சம்பவங்களும் இந்த நூலில் இடம் பெற்றுள்ளன. அனுமன் குறித்து இவ்வளவு விரிவான தகவல்களுடன் வெளிவரும் முதல் நூல் இதுவே என்று துணிந்து கூறலாம்.




ஒவ்வொருவர் வீட்டிலும் நிச்சயம் இருக்க வேண்டிய ஒப்பற்ற நூல்!